● ETERNA ● PATEK PHILIPPE ● JAEGER LECOULTRE ●

ZENITH ● LECOULTRE JAEGER ● INTERNATIONAL ● CONSTANTIN & VACHERON ● PATEK PHILIPPE

JOHN BARREL ● ZENITH ● CONSTANTIN & VACHERON ● PATEK PHILIPPE ● ETERNA ● INTERNATIONAL




# 1949

இன்னும் சில தினங்களில், பிறக்கப் போகும் புத்தாண்டில், நாடெங்கிலும் அனைவருக்கும் 1949 அமோகமான ஆனந்தத்தையும் ஐஸ்வரியத்தையும் அளிக்கட்டும் என்று நல்லெண்ணத்துடன் வரவேற்போம். பிடித்தமானவைகளைத் தேர்ந்தெடுக்குமாறு மிக அழகிய ஸ்விஸ் கைக் கெடியாரங்களும் டைம்பீஸ்களும் நாள்தோறும் வந்து குவிந்தவண்ணமிருக்கின்றன என்ற நற்செய்தியை அறிவித்துக் கொள்வதுடன் நண்பர்களுக்குப் டீலர்களுக்கும் பேவர்-லூபா கம்பெனியார் தங்களது மனமார்ந்த புது வருஷ வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறார்கள்.




பேவர்-லூபா & கம்பெனி லிட். பம்பாய் & கல்கத்தா

● ZENITH ● SANDOW ● JOHN BARREL ● INTERNATIONAL ●



# டால்டாவில் வறுத்த உருளைக்கிழங்கு வடைகள்

## எச்சமயத்திலும் சுவைமிகுந்தவை!

உருளைக்கிழங்கை கழுவி தோலுடன் வேகவைக்கவும். கிழங்கு பதமானதும் தோலை அகற்றி சிறிது பால்விட்டு பொடி செய்யவும். ருசிக்குத்தகுந்தபடி உப்பும், மிளகு பொடியும், நறுக்கின கொத்தமல்லி இலையும் சேர்த்துக்கொள்ளவும். தட்டை வடைகளாகச்செய்து முட்டையின் வெள்ளைக் கருவிலோ அல்லது கரைத்த அரிசி மாவிலோ தோய்த்து. ரொட்டித் தூளிலோ மைதாமாவிலோ பிரட்டவும். பரந்த வாணலியில் டால்டாவை சூடாக்கி அதில் வடையின் இருபக்கங்களும் சிவக்கும் வரை வறுக்கவும். வடைகளை சுடச்சுட சாப்பிடுங்கள் — நீங்கள் அவைகளை மிகவும் விரும்புவீர்கள்! டால்டா, அதனால் செய்யப்பட்ட எல்லா பதார்த்தங்களின் சுவையையும் எடுத்துக்காட்டுகிறது.

## "சிவபெருமானின் நடனம்"

6 வர்ணங்கள் கொண்ட
கவர்ச்சிகரமான 1949 காலெண்டர்

சில பிரதிகளே கைவசம் இருக்கின்றன. தபால் செலவுக்கு 4 அணா ஸ்டாம்பு சகிதம் உடனே எழுதுங்கள்.

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




HVM. 74A-23 TM

# எனது ஆல்பத்தில் ஒரு பக்கம்!

"போட்டோ ஆல்பத்தின் ஒவ்வொரு பக்கமும் கவர்ச்சிகரமாக விளங்க என்ன வேண்டும்?

தேவைகள் மிகவும் சுலபமாகவும் எளிதிலும் கிடைக்கக் கூடியவை.

முதலாவதாக ஒரு கேவார்ட்ஸ் ரோல் பிலிம் அல்லது பிளேட்.

இரண்டாவதாக ஒரு கேவார்ட்ஸ் பேப்பர்



அலைட்
போட்டோகிராபிக்ஸ்
லிமிடெட்

பம்பாய் - கல்கத்தா - மதராஸ்

# வானத்தை வில்லாக வளைக்க வேண்டுமா ?
# இமயத்தின் உச்சிக்குத் தாவவேண்டுமா ?

இப்படிக் கேட்பதெல்லாம் கன்னி கட்டழகியாக இருக்கும் வரைதான் அவள் அழகு அழிந்து, குரூபியாகிவிட்டால் வெறுப்புக்கு இலக்காகும் பிசாசாகி விடுகிறாள். இது காதலா? இல்லை. என்ன என்பதை விளக்குவது.................





கிருஷ்ணா பிக்சர்ஸ்

# கிருஷ்ண பக்தி

**P.U. சின்னப்பா T.R. ராஜகுமாரி**

N.S. கிருஷ்ணன் K.A. ராமசாமி D. பாலசுப்ரமணியம்
T.A. மதுரம் P.A. பெரியநாயகி S.P.L. தனலக்ஷ்மி

டைரக்ஷன்
**R.S. மணி**

ஸ்டுடியோ : நியுடோன்



# அகௌன்டென்ட் தலைவலியால் தாக்கப்பட்டார்



### அதன் காரணத்தை க்ருஷன் ஸால்ட் விளக்கியது

சர்மா ஒரு நல்ல கணக்கர் — அவர் தலை நோயால் கஷ்டப்படவிருக்கும் வரையில் அவர் வேலை செய்யவும் முடியாதபடி அவருக்கு நோவு மிக மோசமாகியது. மானேஜர் அவரது வேகமின்மையைக் குறித்து புகார் செய்தபோது சர்மா தனது நோயின் காரணம்தான் என்பதை விளக்கினார். பின்பு மானேஜர் அவருக்குக் இரக் கண்டவாறு யோசனை சொன்னார்: "காலை உண்டிக்கு முன் தினமும் 'க்ருஷன்' சாப்பிடுங்கள்."

இரண்டே வாரங்களுள் சர்மா புதிய மனிதராகி விட்டார் — தன் வேலையில் ஊக்கம், கவனம் முதலியவைகளுடன், ஆறு மாதங்கள் தலைவலி ஓர் மறைந்த நினைவைப்போல் உத்தியோக உயர்வும் அதிக சம்பளமும் அடையப் பெற்றார்.

கோளாறு கொண்டுள்ள வயிறே அல்லது வயிற்றில் தங்கிக்கொண்டு ரத்தத்தை நச்சாக்கும் மலங்களினாலேதான் தலைவலி ஏற்படக் காரணமாகும். இவ்விஷத்தை அப்புறப் படுத்துங்கள் — மறுபடி சோர விடாதீர்கள் — பின் நீங்கள் கவலை கொள்ளவே வேண்டாம். அவ்வாறு தான் 'க்ருஷன் ஸால்ட்' விரைவாகவும் எப்போதும் தலைவலியினின்று காப்பாற்றுகிறது. இவ்வாதம் மற்றும் பல நோய்களை உண்டாக்கும் விஷக்கெடுதியை விளைவிக்கும் அமிலங்கள் இவற்றை அப்புறப் படுத்த 'க்ருஷன்' இயற்கைக்கு உதவுகிறது. இன்றே க்ருஷன் வாங்குங்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும். விலை ரூ. 1-10 (மஞ்சள் பெட்டியில்.)




## நீங்கள் கூட அந்த க்ருஷன் உணர்ச்சியை அடையலாம்

★

சென்னையில் ஏக
காலத்தில் மூன்று
தியேட்டர்களிலும்
மற்றும் முக்கிய
நகரங்களிலும்
நடைபெறுகிறது

★



மாடர்ன் தியேட்டர்ஸின்

# ஆதித்தன் கனவு



டி. ஆர் மஹாலிங்கம், அஞ்சலி தேவி,
காளி என். ரத்னம், வி. டி. ராஜகாந்தம்,
லலிதா - பத்மினி முதலியோர் நடிப்பது

இன்ப கானம், இனிய நடனம்
தெவிட்டாத கதைப் போக்கு
இடைவிடா நகைப்பூட்டும்
ஹாஸ்யம்

★

டைரக்ஷன் :
**T.R.** சுந்தரம், B.A., B.Sc. (Leeds)

★

**மாடர்ன் தியேட்டர்ஸ்**
லிமிடெட்
சேலம் & மதுரை

# அமரகவி பாரதியாரின்

# அற்புதமான மூன்று பாடல்கள்!







கோகிலகான இசைவாணி

ஸ்ரீமதி

எம். எஸ். சுப்புலக்ஷ்மி

ரிக்கார்டு N. 28050

யாமறிந்த மொழிகளிலே

செந்தமிழ் நாடு

வாழிய செந்தமிழ்

இந்த ரிக்கார்டு விற்பனையின் நிகரலாபம்
பாரதி நிதியைச் சேரும்



## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி, லிமிடெட்

டம்டம் — பம்பாய் — மதராஸ் — டில்லி

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 6 | இதழ் 22 — டிசம்பர் 26 — சர்வதாரி ௵ மார்கழி 12



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

# இந்த மாறுதலடையும் யுகத்தில்...

## யந்திரீக விவசாயம்

தற்சமயம் இந்தியாவில் விவசாயம் கிரமமாக இயந்திரங்களின் உதவியால் செய்யப்பட்டு வருகிறது. புராதன கலப்பைகளுக்கு பதிலாக, டிராக்டர்களும் மற்றும் நவீன இயந்திரங்களும் உபயோகிக்கப்பட்டு வருகின்றன.

நிலத்தின் விளைவுத் தன்மையை அதிகரிக்க, உரம் தயாரிக்கும் ஆலைகளும், நீர்ப்பாசன திட்டங்களும் பெரும்பாலும் சாதகமானவை. விவசாயத்திற்கு தேவையான இயந்திர சாதனங்களை அளிப்பதில், எஃகு இன்றியமையாதது.

ஒரு டிராக்டர் உழுவதை பண்டித நேரு பார்வையிடுகிறார்.




டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி லிமிடெட்

தலைமை சேல்ஸ் ஆபீஸ்:
23B, நேதாஜி சுபாஷ் ரோடு,
கல்கத்தா.




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 22

# என்ன சேதி?

## கவர்னர் ஜெனரல் சம்பளம்...... குறைந்து விட்டது!

இந்தியா தேசம் நூற்றைம்பது வருஷத்துக்கு மேலாக அன்னிய ஆட்சியின் கீழ் இருந்த காரணத்தினால் பல கேடுகள் விளைந்தன. அந்தக் கேடுகள் எவ்வளவு தூரம் நம்மில் சிலருடைய மனோ நிலையைப் பாதித்துக் கீழ்மைப்படுத்தி யிருக்கின்றன என்பது சில காலமாகக் கவர்னர் ஜெனரல் சம்பளத்தைப் பற்றி நடந்த விவாதத்திலிருந்து வெளியாயிற்று. கவர்னர்-ஜெனரல் சம்பளத்தைப் பொதுப்படையாகப் பேசுவதுடன் அவர்கள் நிற்கவில்லை. "ராஜாஜி மாதம் இருபதினாயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறாரா?" என்று பொருமினார்கள். "இருபதினாயிரம் ரூபாய் சம்பளத்துக்கு வருமான வரிகூடக் கிடையாது!" என்று தலையிலடித்துக் கொண்டு சத்தியப் பிரமாணம் செய்தார்கள்.

சென்ற முப்பது வருஷ காலமாக ராஜாஜியின் வாழ்க்கையை நாம் எல்லாரும் கவனித்து வந்திருக்கிறோம். தமக்கென்று சொத்து வைத்துக் கொள்ளாத தலைவர் அவர். தமக்கென்று வருமானம் தேடிக்கொள்ளாத தலைவர் அவர். எளிய வாழ்க்கைக்கு உதாரண புருஷர் அவர். தாம் சம்பந்தப்பட்ட மட்டில், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரைப் போலத் தங்கப் பவுனையும் ஓட்டாஞ் சல்லியையும் ஒன்றாகக் கருதும் வைராக்கிய புருஷர். பொதுப் பணம் சம்பந்தப்பட்ட வரையில் காலணாவை ஆயிரம் ரூபாயாகக் கருதிப் பாதுகாக்கும் நேர்மையாளர். இதையெல்லாம் நம் கண் முன்னால் திறந்த புத்தகத்தைப்போலக் கண்டபின்னரும் "ராஜாஜி சம்பளம் அதிகம் வாங்குகிறார்" என்ற புகாரைச் சிலர் சொல்லுகிறதென்றால், அப்படிச் சொன்ன மனிதர்கள் அடிமை வாழ்வின் காரணமாக அடைந்துவிட்ட துர்க் கதியைக் குறித்து நாம் இரங்கத்தான் வேண்டும்.

கவர்னர் ஜெனரல் பதவிக்குச் சம்பளம் ரூ 20,000 என்று ஏற்படுத்தியவர்கள் பிரிட்டிஷார். அந்தப் பதவியை ராஜாஜி ஜூன் மாதக் கடைசியில் ஒப்புக்கொண்டார். ஆறு மாதம் சம்பளம் வாங்கியிருக்கிறார். மாதம் இருபதினாயிரம் விதம் அல்ல. வருமான வரி ரூ 13,000 போகப் பாக்கி ரூ. 7,000 விதந்தான். இந்த ரூபாயையும் அவர் மனசார வாங்கிக் கொள்ளவில்லை. சம்பளத்தைக் குறைத்து நிர்ணயிக்கும்படி மந்திரி சபைக்கு எழுதிவிட்டார். வேறு எத்தனையோ முக்கியமான அலுவல்களில் ஈடுபட்டிருந்த நேரு மந்திரி சபை இந்த விஷயத்தை அவசரமானதாகக் கருதவில்லை. ராஜாஜி பெற்றுக் கொள்ளும் பணம் எவ்வளவாயிருந்தாலும் அது தேச நன்மைக்கே பயன்படும் என்பதை அவர்கள் அறிவார்கள். உலகத்திலேயே மிகப் பெரிய தேசத்தின் அரசாங்கத் தலைவர் என்ற ஹோதாவைத் தக்கபடி வகிப்பதற்குரிய முறையில் இப்போதைக்கு மட்டுமல்லாமல் பிற்காலத்துக்கும் சேர்த்துச் சம்பளத்தை நிர்ணயிக்க அவர்கள் விரும்பினார்கள். பின்னால் மறுபடியும் மாற்றுவதற்கு இடமில்லாதபடி நன்கு யோசித்துச் செய்ய விரும்பினார்கள். அதன்படியே யோசித்துக் கவர்னர் ஜெனரலின் சம்பளம் மாதம் ரூ. 5,500 என்றும் அதற்கு வருமான வரி கிடையாது என்றும் தீர்மானித்திருக்கிறார்கள். கவர்னர் ஜெனரல் சம்பளம் மாதம் ரூ 20,000 என்பதை நினைத்து ஆறு மாதமாகத் தூக்கமில்லாமல் தவித்துக்கொண்டிருந்தவர்கள் இனி நிம்மதியாகத் தூங்குவார்கள் என்று நம்புகிறோம். பற்றுக்களைப் பரிபூரணமாக ஒழித்த தியாகமூர்த்திகளான தலைவர்களின் விஷயத்திலேகூட இந்த மாதிரியெல்லாம் சந்தேகப்பட்டுப் பேசுவோரின் அற்பத்தனத்தைக் குறித்து நேருஜி கூறிய வார்த்தைகளை இந்தியப்

பொது மக்கள் முழுமனதுடன் ஆதரிப்பார்கள் என்றும் நம்புகிறோம்.

## குதி கிணற்றில்!

மலையாளத்தில் வழங்கும் ஒரு கதை. இரண்டு நம்பூதிரிகள் ஒரு பெண்ணைக் காதலித்தார்கள். இருவரும் அவளைக் கலியாணம் செய்து கொள்ள விரும்பினார்கள். அந்தப் பெண் ஒரு நாள் அவளுடைய வீட்டுக் கொல்லைக் கிணற்றில் விழுந்து விட்டாள். நம்பூதிரிகள் இருவரும் அதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நம்பூதிரி ஓட்டமாக ஓடிச் சென்று அவளைக் காப்பாற்றுவதற்காகக் கிணற்றில் குதித்தார். இன்னொரு நம்பூதிரி இதைப் பார்த்துக் கொண்டிருந்தார். காதலித்த பெண்ணைக் காப்பாற்றும் விஷயத்தில் தான் பின் வாங்கக் கூடாது என்று அவரும் ஓடிப்போய்ப் பார்த்தார். குறுகலான கிணறானதால் அந்தக் கிணற்றில் குதிக்க இடமில்லை. எனவே அவசர அவசரமாக ஓடிப்போய் அடுத்த வீட்டுக் கிணற்றில் குதித்தார்!

சுதந்திர தேவியை அடைவதற்காகக் காங்கிரஸ் மகாசபையைச் சேர்ந்தவர்கள் முப்பது வருஷகாலம் போராடினார்கள். தியாகம் செய்தார்கள். கடைசியாகச் சுதந்திர தேவி அருள் புரிந்தாள். காங்கிரஸ்காரர்களுக்கு மட்டுமா? தேச மக்கள் அனைவருக்குந்தான்.

காங்கிரஸ் வாதிகள் தியாகத்தினாலும் சிறை புகுந்ததினாலும் அடைந்த செல்வாக்கை வேறு சில மனிதர்கள் பார்த்தார்கள். "கட்சி" என்று பெயர் சூட்டிக் கொண்டார்கள். இப்போது சட்ட மறுப்புச் செய்து சிறை செல்கிறார்கள். அடுத்த வீட்டுக் கிணற்றில் விழுந்த நம்பூதிரியின் செய்கையைப் போல் நகைக்கத் தக்க காரியம். பல நூறு வருஷம் அடிமையாயிருந்த இந்தியா சுதந்திரம் பெற்றது குறித்து அனைவரும் அளவில்லாத மகிழ்ச்சியடைந்து ஆனந்தப்பட வேண்டும். ஆனந்தப்படக் கொடுத்து வைக்காத துர்ப்பாக்கியசாலிகள் சில காலம் பேசாமல் வாயை மூடிக்கொண்டு சும்மா இருக்கலாம். அப்படி இராமல் ஆர். எஸ். எஸ். காரர்களும், மற்றும் சில மனிதர்களும் சுதந்திர இந்தியாவில் சட்ட மறுப்புச் செய்து சிறை செல்கிறார்கள். இதைப்போல் நகைக்கத்தக்க பைத்தியக்காரச் செயல் வேறொன்றுமில்லை. இந்திய சரித்திரத்தில் இந்த மாதிரி மக்களுக்குள் பிளவை உண்டு பண்ணும் காரியங்கள் விபரீதம் விளைவித்து தேசத்துக்குப் பெருந் தீமைகளை உண்டு பண்ணியிருக்கின்றன; தேசம் சுதந்திரத்தை இழப்பதற்கும் காரணமாயிருந்திருக்கின்றன. ஆனால் அதிர்ஷ்டவசமாக இந்தக் காலத்து மகாஜனங்கள் நல்லறிவு பெற்றவர்களாதலால், இப்போது சட்ட மறுப்புச் செய்கிறவர்களிடம் அநுதாபமோ ஆதரவோ காட்ட மாட்டார்கள். தேசத்துக்குத் தீங்கான காரியத்தைச் செய்கிறார்கள் என்று வெறுத்து ஒதுக்குவார்கள். ஆகையால் இப்போது நடக்கும் சட்ட மறுப்பினால் தேசத்துக்குப் பெரிய தீங்கு எதுவும் நேராதென்று நாம் ஆறுதல் அடையலாம்.

## மாணவர் மறியல்

தென்னிந்தியாவில் உள்ள கலாசாலைகள் பலவற்றில் மாணவர்கள் வேலை நிறுத்தமும் மறியலும் செய்ய நேர்ந்த அவசியம் பற்றி ஒரு மாணவர் எழுதியிருக்கும் விரிவான கடிதத்தை வட்ட மேஜையில் வெளியிட்டிருக்கிறோம். காலேஜுகளில் 'ஸெலக்ஷன் பரீட்சை' என்னும் வடிகட்டும் பரீட்சை நடத்துவதை நாமும் ஆட்சேபிக்கிறோம். அதனால் மாணவர்கள் பல இன்னல்களுக்கு உள்ளாவது மறுக்க முடியாத உண்மை. ஆயினும் வடிகட்டும் பரீட்சையை ஒழிப்பதற்காக மாணவர்கள் கையாண்ட வேலை நிறுத்த—மறியல் முறைகளை நாம் ஆதரிக்க முடியாது. வேலை நிறுத்தத்தை ஒருவாறு ஒப்புக் கொண்டாலும் மறியலை ஒருகாலும் ஆதரிக்க முடியாது. மாணவர்களுக்குள் இது விஷயத்தில் ஒற்றுமையான அபிப்பிராயம் இருக்கும் பட்சத்தில் மறியலுக்கு அவசியம் இல்லை. எல்லாரும் ஸெலக்ஷன் பரீட்சைக்குப் போகாமல் நின்றுவிட்டாலே போதும். அப்படியின்றி ஒரு சிலர் பரீட்சைக்குப் போகாமல் நின்று மற்றவர்கள் பரீட்சைக்குப் போனால், போகிறவர்களை மறியல் செய்வது பெருங் குற்றமாகும். இந்தியாவின் சுதந்திரம் பெறுவதற்காகக் கையாண்ட வேலை நிறுத்த—மறியல் முறைகளைக் கேவலம் ஸெலக்ஷன் பரீட்சை விஷயத்தில் கையாளுவது, மாட்டுப் பொங்கலன்று கோ பூஜை செய்வதைப் பார்த்துவிட்டுச் சிலர் பெருச்சாளிக்குப் பூஜை செய்ய முயல்வதையே ஒக்கும். இது காரணமாகக் கஷ்டங்களுக்கு உள்ளான மாணவர்களிடம் நமக்கு அநுதாபத்தைக் காட்டிலும் பரிதாபமே அதிகம் உண்டாகிறது. வேலை நிறுத்தம் மறியல் முறைகளை மாணவர்கள் கையாண்டதை நாம் வெறுத்தபோதிலும் அவர்களுடைய காரியம் நமது காலேஜுகளில் உள்ள ஒரு பெரிய தீமையை வெளிப்படுத்தியிருக்கிறது. சென்ற வரு

ஷத்தில் எஸ். எஸ். எல். ஸி. மாணவர்களுக்கு வடி கட்டும் பரீட்சை வேண்டாமென்று சென்னை சர்க்கார் உத்தரவிட்டார்கள். எஸ். எஸ். எல். ஸி. க்கு அது வேண்டாம் என்றால் காலேஜ் வகுப்புகளுக்கு நிச்சயம் வேண்டியதில்லை. நமது சர்வகலாசாலை ஸிண்டிகேட்டும் வைஸ் சான்ஸலரும் சென்னை சர்க்காரும் கண் திறந்து பார்த்து காலேஜ்களில் வடிகட்டும் பரீட்சை நடத்தும் வழக்கத்தை உடனே ஒழித்துக் கட்டுவார்களாக.

## மாகாணப் பிரிவினை

"நரி வலது பக்கம் போனாலும் சரி தான், இடது பக்கம் போனாலும் சரி தான்,—மேலே விழுந்து பிடுங்காமல் போனால் சரி!" என்று சொல்வது உண்டு. பாஷா வாரி மாகாணக் கமிஷனின் யாதாஸ்து மேற்படி பழமொழியை ஞாபகப்படுத்துகிறது. பாஷா வாரியாக மாகாணத்தைப் பிரிப்பது தேச ஒற்றுமைக்குத் தீங்கு விளைவிப்பதாகும் என்றும், நிர்வாக சௌகரியத்துக்காகப் பிரிக்கலாம் என்றும், அதுவும் இப்போது கூடாது என்றும், கமிஷன் முக்கியமாகச் சிபார்சு செய்திருக்கிறது. இந்தக் கருத்துக்களுக்கு ஓரளவு தேசத்தில் ஆதரவு இருக்கலாம். தேசத்தில் எவ்வளவோ முக்கியமான பிரச்னைகள் இருக்கும் போது மாகாணப் பிரிவினைக்கு இப்போது என்ன அவசரம் என்று சிலர் நினைக்கக்கூடும். ஆயினும் பாஷாவாரி மாகாணம் பிரிக்காததினால் ஆந்திர அரசியல் வாதிகளுக்கு ஏற்படும் அதிருப்தியையும் அதனால் சென்னை மாகாண நிர்வாகத்துக்கு ஏற்படும் அல்லல்களையும் எண்ணும்போது எப்படியேனும் சீக்கிரத்தில் பிரித்துத் தொலைத்து விடுவதே நல்லது என்று நாம் கருதுகிறோம்.

ஆனால் பம்பாய் நகரையும் சென்னை நகரையும் பற்றிக் கமிஷன் சொல்லியிருக்கும் அபிப்பிராயத்துக்கு நியாயம் எதுவுமே கிடையாது. பம்பாயைப் பற்றி நமக்குக் கவலையில்லை; ஒருவேளை பம்பாயைப் பற்றிய கமிஷன் முடிவுக்கு ஆதாரம் இருந்தாலும் இருக்கலாம். ஆனால் நாற்பது எண்பது பேர் தமிழர்களாயுள்ள சென்னையைத் தனி மாகாணமாக்கலாம் என்று சொல்வது மிகத் தவறான, அநீதமான யோசனை என்பதில் ஐயமில்லை. சென்னை நகரம் தமிழ் மாகாணத்தைச் சேர்ந்ததே யாகும். இதற்கு மாறாகச் செய்யும் முயற்சிகள் எல்லாம் குட்டிச்சுவரில் முட்டிக் கொள்வதாகவே முடியும்.

## தப்பமுடியாது! உஷார்!




இந்தோனேஷியக் குடியரசின்மீது டச்சு ஏகாதிபத்தியம் தொடுத்துள்ள அக்கிரமமான யுத்தம் ஆசியா முழுதும் மிகுந்த மனக்கொதிப்பை உண்டுபண்ணி யிருக்கிறது.

# ஜெயபுரியில் தலைவர்கள் பிரதிக்ஞை

கண்கொள்ளாக் காட்சியுடன் விளங்கிய காந்தி நகரின் செயற்கை அழகுக்குப் போட்டியாக இயற்கையும் தன் அழகை அள்ளி வீசியது! வான வெளி, மப்பு மந்தாரம் சிறிதுமின்றி மாசு மறுவற்ற நீல வர்ணத்தினால் தீட்டப்பட்டிருந்தது. மேற்கே சாய்ந்த சூரியனின் செங்கதிர்கள், அலைமோதிக் கொண்டிருந்த ஜன சமுத்திரத்தைப் பிரகாசிக்கச் செய்தன.

சுதந்திர இந்தியாவில் நடைபெற்ற முதலாவது இந்திய தேசிய மகாசபைக் கூட்டத்துக்கு இரண்டு லட்சம் ஜனங்களுக்குமேல் விஜயம் செய்தனர்.

ஜெயபுரியில் மேற்படி கூட்டத்துக்காக நிர்மாணமாகிய காந்தி நகரில் அமைக்கப்பட்டிருந்த பந்தலின் ஐந்து முக்கிய வாசல்கள் வழியாக இடைவிடாது ஜனங்கள் வந்து கொண்டிருந்தார்கள்.

ஐந்து ஜீவநதிகள் சமுத்திரத்தை வந்து அடைவதுபோல் இருந்தது அந்த அற்புதமான காட்சி!

ஓங்கி உயர்ந்து வளர்ந்திருந்த மலைத் தொடர்கள் காங்கிரஸ் பந்தலை அடுத்துக் கம்பீரமாக நிற்கும் காட்சியும் ஜனங்களைக் கவர்ந்தது.

பந்தலுக்குள்ளே இடம் கிடைக்காத பதினாயிரக்கணக்கான கிராமவாசிகள் அந்த மலைகளின் மீதேறிக் காங்கிரஸ் நடவடிக்கைகளைக் கண்டு களித்தனர்.

அக்ராசனர் அமர்ந்திருந்த பிரம்மாண்டமான மேடையில் மாபெரும் தலைவர்களும் கவர்னர்களும் மாகாண மந்திரிகளும், சமஸ்தான மந்திரிகளும் ஆயிரக் கணக்கான பிரதிநிதிகளும் வீற்றிருந்தார்கள்.

கவர்னர்களும் மந்திரிகளும் அன்னிய நாட்டு அரசாங்கத்தின் பிரதிநிதிகளும் காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் கலந்துகொண்டது இதுதான் முதல் தடவையாகும்.

இத்தகைய வைபவங்களுடன், இந்திய தேசிய மகாசபையின் ஐம்பத்து ஐந்தாவது கூட்டம் அமோகமாகவும் வெற்றிகரமாகவும் நடந்தேறியது.

* * *

சுதந்திர இந்தியாவில் நடைபெற்ற முதலாவது காங்கிரஸில் மகாத்மா காந்தியும் பிரசன்னமாகி யிருந்தார்!

ஆம்! ஜீவகளை ததும்பும் காந்தி மகானின் முழு உருவப்படம் மேடைக்கு அப்பால் காட்சி அளித்தது. லட்சக் கணக்கானவர்கள் ஏக காலத்தில் அதைத் தரிசித்தனர். அவர்களுடைய மனம் என்றும் மங்காத அமர வாழ்வு பெற்ற அந்த மகானின் அருமை பெருமைகளை ஏக காலத்தில் நாடியது. காங்கிரஸில் பேசிய தலைவர்களும் இனியும் தேச மக்கள் காந்திஜியின் அடிச்சுவடுகளையே அனுவளவும் வழுவாது பின்பற்ற வேண்டும் என்று அடிக்கடி வற்புறுத்திக் கூறினர்.

எனவே, சுதந்திர இந்தியாவின் முதலாவது தேசிய மகாசபைக் கூட்டத்தில் மகாத்மாவின் ஸ்தூல சரீரம் இல்லையே என்ற எண்ணம் எவருக்கும் ஏற்படாதவாறு அந்த மகான் எல்லோருடைய ஹிருதய பீடத்திலும் வீற்றிருந்தார்!

* * *

ஆறு வருஷகாலம் நடந்த யுத்தம் காரணமாகச் சுதந்திர வல்லரசுகளின் பொருளாதார வாழ்வு முற்றிலும் சீர்கேடு அடைந்து விட்டது. அதைச் சீர்படுத்த இன்னும் எத்தனை ஆண்டுகள் ஆகுமோ என்று வல்லரசுகள் ஏங்குகின்றன.

அப்படியிருக்க அடிமை வாழ்வில் உழன்று கொண்டு இருநூறு வருஷ காலம் போராடிய பாரத நாட்டு மக்களின் கல்வி, கலாச்சாரம், சமுதாயம், பொருளாதாரம் முதலிய சகல துறைகளும் எவ்வளவு தூரம் சீர்குலைந்து போயிருக்கும் என்பதை எல்லோரும் கவனிக்க வேண்டும். அவற்றைச்

சேர்ந்திருந்த எவ்வளவு உறுதியும், ஊக்கமும், ஒற்றுமையும் வேண்டும் என்பதை எல்லோரும் உணர வேண்டும்.

இந்த உண்மையை காங்கிரசில் பேசிய நமது மாபெரும் தலைவர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.



"இனி நம் நாட்டின் எஜமானர்கள் நாம்தான். சுதந்திர இந்தியா பல்வேறு பிரச்னைகளுக்கும் இரையாகிச் சீர்குலைந்து விடும் என்று உலக நாடுகள் எண்ணின. ஆனால் அவைகள் பிரமிக்கும்படியாகச் சென்ற ஒரு வருஷ காலத்தில் நாம் முன்னேற்றம் அடைந்திருக்கிறோம்.

"சகல நல்ல காரியங்களுக்கும் விதை விதைக்கச் சுதந்திர இந்திய பூமி மிகவும் செழுமையானது. நாம் பெற்றுள்ள சுயராஜ்யத்தைக் குறித்து ஒவ்வொரு தனி மனிதனும் பெருமிதம் கொள்ள வேண்டும்.

"இந்தியாவிலுள்ள சகலருக்கும் உணவும் உடையும் கிடைக்க வேண்டும்; கல்வி வசதியும் வைத்திய வசதியும் கிடைக்க வேண்டும்.

"அவ்வாறு கிடைக்கும்படி செய்தால்தான் காங்கிரஸ் பிரதிக்ஞை செய்து கொடுத்துள்ள ராம ராஜ்யத்தை ஸ்தாபிக்க முடியும். அவ்வாறு ஸ்தாபித்தால்தான் காங்கிரசின் பெருமை நிலைக்கும்."

*காங்கிரஸ் அக்ராசனர் டாக்டர் பட்டாபி சீதாராமய்யா, காங்கிரஸ் எதிர்காலத்தில் செய்ய வேண்டிய கடமையைப் பற்றி மேற்கூறிய விதம் குறிப்பிட்டார்.*

"நம் நாடு கம்பீரமாக நிமிர்ந்து நின்று முன்னோக்கிச் செல்ல வேண்டும். திரும்பித் திரும்பிப் பார்த்துக் கடந்த காரியங்களை எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டிருக்கக் கூடாது. குறுகிய மனப்பான்மையை அடியோடு ஒழித்துவிட வேண்டும். குறுகிய நோக்கமானது சுயநம்பிக்கையை இழக்கும்படி செய்து விடும். எதிர்காலத்தில் ஆசியா மகத்தான பெருமையுடனும் கீர்த்தியுடனும் விளங்கப் போகிறது. ஆசியா அவ்வாறு விளங்குவதற்கு இந்தியா தான் வழி காட்டப் போகிறது."

*இவ்வாறாக, பண்டித ஜவாஹர்லால் நேருவின் கர்ஜனை, ஆசியாவின் எதிர்காலத்திலும் இந்தியாவின் எதிர்காலத்திலும் எல்லோருக்கும் தளரா நம்பிக்கை ஏற்படுமாறு செய்திருக்கிறது.*

"காங்கிரசின் கொடிக்கு, அதாவது நம் தேசத்தின் கொடிக்கு எல்லோரும் மரியாதை செலுத்த வேண்டும். இந்தக் கொடியின் ஸ்தானத்தில் எவராவது வேறொரு கொடியைக் கொண்டுவர முற்பட்டால், அவரது எண்ணம் எளிதில் ஈடேறாது. நிச்சயமாகப் போராட்டம் நடந்தே தீரும்.

"ஜாதி சமய, மத, வர்க்க பேதம் எதுவும் இல்லாத ஜனநாயகத்தை இந்தியாவில் ஸ்தாபிக்க வேண்டும் என்பதே காங்கிரஸ் செய்துள்ள பிரதிக்ஞையாகும். காங்கிரஸ் கொடியின் கீழ் நாம் எல்லோரும் தியாகம் செய்ததும் அதற்

காகத்தான். மன்னர்களும் மகுடாதிபதிகளும் இந்தக் கொடிக்கு வணக்கம் செய்கிறார்கள். அப்படியிருக்க, இந்தக் கொடியின் பெருமையை ஆட்சேபிப்பவர்களை நாங்கள் இலகுவில் விட்டு விட மாட்டோம்."

இந்தியாவின் விரோதிகளுக்கு,—அவர்கள் உள்நாட்டில் இருப்பினும் சரி, வெளிநாடுகளில் இருப்பினும் சரி,—மேற்கூறிய விதம் சர்தார் பட்டேல் எச்சரிக்கை செய்திருக்கிறார்.

* * *

சுதந்திர இந்தியாவின் விரோதிகள் யார்?

அவர்கள் இந்தியாவுக்கு வெளியில் இல்லை, உள்ளேதான் இருக்கிறார்கள்.

இந்தியாவில் சுதந்திரப் போர் நடந்த காலத்தில் மேற்படி போரில் பங்கு எடுத்துக் கொள்ளாததுடன், பிரிட்டிஷாருக்குப் பக்கபலமாக இருந்த சிலர் இன்று சுதந்திர இந்திய சர்க்காரைக் கண்டித்து வருவது ஒருபுறமிருக்கட்டும்.

ஆனால், காங்கிரஸ் வாதிகளில்கூடச் சிலர், தெரிந்தோ அல்லது தெரியாமலோ தேசத்தின் இணையற்ற தலைவர்களைக் கண்டிக்கத் துணிவதுதான் ஆச்சரியமாக இருக்கிறது.

இல்லாவிடில், காங்கிரஸ் மந்திரிகளின் ஒழுக்கத்தைக் குறை கூறும் தோரணையில் ஒரு காங்கிரஸ்வாதி காங்கிரஸில் தீர்மானம் கொண்டு வருவாரா?

பண்டித நேருவும் சர்தார் பட்டேலும் சபையில் இராத சமயத்தில் அந்தத் தீர்மானம் நிறைவேறியதெனினும், பின்னர் அதன் விஷத்தன்மையை நமது தலைவர்கள் சுட்டிக் காட்டவே, அது மீண்டும் ரத்து செய்யப்பட்டு நமது தலைவர்களின்மீது சபையினர் பூரண நம்பிக்கையைத் தெரிவித்தனர்.

பாரதநாடு சுதந்திரம் பெறுவதற்காக எத்தனையோ வருஷங்களாக நம் தேசபக்தர்கள் உடல் பொருள் ஆவி அனைத்தையும் தியாகம் செய்திருக்கிறார்கள்.

எனினும், இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு மூல புருஷர்களாக விளங்கியவர்கள் மகாத்மா காந்தி, பண்டித ஜவாஹர்லால் நேரு, சர்தார் பட்டேல் முதலிய ஒரு சில அருமைத் தலைவர்களே என்பதை எவரும் ஒப்புக் கொள்ளும். அவர்களுடைய திறமையையோ, தியாகத்தையோ, தேசபக்தியையோ, நேர்மையையோ, நிதான புத்தியையோ குறை கூறுவோரை நன்றி கெட்டவர்கள் என்றுதான் சொல்லவேண்டும்.

சென்ற இரண்டு வருஷங்களாக கோரமான ஆயுதப்போரில் ஈடுபட்டுள்ள இந்தோனேஷ்யா இன்னும் சுதந்திரம் பெறவில்லை. ஐக்கிய நாடுகள் சபையின் முயற்சியால் அந்தத் தேசத்தில் சென்ற பல மாதங்களாக நின்றிருந்த போர் மீண்டும் மூண்டுவிட்டது. இந்தோனேஷ்யக் குடியரசின் தலைநகரை டச்சுக்காரர்கள் ஆக்கிரமித்துக் கொண்டு அதன் தலைவர்களையும் சிறைப்படுத்தியிருக்கிறார்கள்.

சுதந்திரம் பெறுவதற்காக ஒவ்வொரு நாடும் அவ்வாறு பாடுபட்டு வருகையில், தங்களுடைய வாழ்நாளில் அரும் பெரும் தியாகங்கள் செய்து உலகமே பிரமிக்கத்தக்க முறையில் சாத்வீகப் போர் புரிந்து சுதந்திரத்தை ஈட்டிய தலைவர்களிடம் இந்தியர்கள் நூறு சத விகிதம் நம்பிக்கை வைக்க வேண்டாமா? கண்களை மூடிக் கொண்டு அவர்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்ற வேண்டாமா? உலகிலே எந்த நாடும் போற்றிப் புகழ்ந்து பெருமிதம் கொள்ளத் தக்க கிடைப்பதற்கரிய தலைவர்களைக் கண்டிப்பவர்களுக்குக் கதி மோட்சம் ஏது?

* * *

ஜெயபுரி காங்கிரஸில் இந்தியாவின் முடிசூடா மன்னரான ஜவாஹர்லால்ஜீ வெளியிட்டுள்ள சுபகரமான ஒரு செய்தி இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் உள்ள கோடிக்கணக்கானவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை.

"சமீபத்தில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் நடந்த மகாநாட்டின் பலனாக, இரு நாடுகளுக்கும் உள்ள பல சிக்கலான பிரச்னைகள் தீருவதற்கு வழி ஏற்பட்டிருக்கிறது" என்று பண்டித நேரு நம்பிக்கையுடன் அறிவித்திருக்கிறார்.

ஒருவேளை பாகிஸ்தான் தலைவர்கள் தங்களுடைய தவறுகளை உணர்ந்து, இந்தியாவிடம் நட்புடனும் நேர்மையாகவும் நடந்து கொள்வதே பாகிஸ்தானின் எதிர்கால க்ஷேமத்துக்கு உற்றது என்ற முடிவுக்கு வந்திருக்கலாம்.

# சிம்மக் காவல்!




"இந்திய சுதந்திரக் கொடியின் பெருமைக்குப் பங்கம் விளைக்க முயல்வோர் யாராயிருந்தாலும் அவர்களை எதிர்த்து அழிப்போம்!" என்று சர்தார் பட்டேல் உறுதி கூறியுள்ளார்.

# சங்கீத தேவதை

இதயத்தில் நிகழுகிற உணர்ச்சியை வேறொரு இதயத்துக்குள் செலுத்துவது மிகவும் கஷ்டமான காரியம்.

நேருக்கு நேர் பேசி உணர்ச்சியைச் செலுத்துவதே கஷ்டமானது.

அப்படி இருக்கும்போது நூற்றுக் கணக்கான வருஷங்களுக்கு முன் நிகழ்ந்த உணர்ச்சியை எப்படி இதயத்துக்குள் வாங்குவது! ரொம்ப ரொம்பக் கஷ்டமான காரியம்.

பக்தர்கள் தங்கள் உணர்ச்சிகளைக் கவி ரூபமாக ஏட்டில் எழுதி வைத்துவிட்டுப் போனார்கள். ஏட்டை வாசிக்கும்போது அந்த உணர்ச்சிகள் எளிதில் வருவதில்லை. அழகாய் அச்சிட்டாலும் வருவதில்லை. ஆனால் ஏட்டில் எழுதியதைச் சங்கீதத்தோடு இசைத்துப் பாடி விட்டால் உணர்ச்சி வந்து இதயத்தைத் தாக்கிவிடுகிறது.

காகிதமும் அச்சும் செய்யாத காரியத்தைச் சங்கீதம் சாதித்துவிடுகிறது.

"ஆழாழி கரையின்றி
நிற்க இலையோ?"

என்னும் அடியில் உள்ள அதிசய உணர்ச்சியை நாம் உணர வேண்டுமானால் அதை ஏதேனும் ஒரு ராகத்தில் உணர்ச்சியோடு பாட வேண்டும். பாடினால் அந்த அதிசயம் நமக்குள்ளே பாய்ந்துவிடும்.

• • •

நம்மவர்கள் சங்கீதத்தை எப்படியெல்லாமோ அனுபவித்துப் பாராட்டி இருக்கிறார்கள். மேல் நாட்டு ஆசிரியர் கார்லைலும் சங்கீதத்தைப் பற்றி ஆவேசத்தோடு பேசியிருக்கிறார்:—

"சங்கீதமானது தேவ பாஷை என்று நன்றாகச் சொல்லியிருக்கிறார்கள்; உண்மையில் உள்ளத்தை வெளியிட மனிதனுக்குக் கொடுத்து வைத்த கருவிகளில் சங்கீதத்தைப் போலத் தெய்வத் தன்மை வாய்ந்தது வேறொன்றும் கிடையாது. இறுதியற்ற பரம்பொருளுக்கு அருகாமையிலேயே நம்மைச் சங்கீதம் கொண்டு வந்து சேர்த்துவிடுகிறது. மாயப் பிரபஞ்சத்தை ஊடுருவிச் சிறிது நேரமாவது எங்கும் நிறைந்த சோதியை நாம் காண முடிகிறது. எப்போது என்றால்: சங்கீதம் வழிகாட்டியாய் முன் சென்று நம்மைப் பரவசமான நிலைக்குக் கொண்டு போகும்போதுதான். உணர்ச்சியை இயற்கையோடு ஒட்டி வைத்துள்ள எல்லாத் தேசத்தவரும் இசையையும் பாடலையும் அபாரமாக மதித்திருக்கிறார்கள்; அவற்றையே கடவுள் வழிபாட்டுக்கு உரிய கருவியாகக் கருதினார்கள். ஞான மார்க்கத்தை வெளியிடவும், நம்மிடம் தெய்வ அம்சம் ஏதாவது இருந்தால் வெளியிடவும் இசையும் பாடலுந்தான் கருவிகள்."




இந்த விதமாக ஆசிரியர் கார்லைல் சொல்லியிருக்கிறார். இதையே நம்மவர்கள் எப்படிச் சொல்லுவார்கள் என்று பார்க்கலாம்.

ஒரு பாடலைப் பாடும் போது அந்தப் பாடலுக்குள் ஏதோ ஒரு ராகம் (மத்திமாவதி) ஊடுருவிச் சென்று கொண்டிருக்கிறது. அவ்விதம் பாடலில் ஊடுருவி மறைந்து செல்லும் ராகத்தையே இறைவன் என்று சுந்தரர் கூறுகிறார்.

"பண்காட்டும் இசையானும்"

பண் என்றால் ராகம். ராகம் பாடலுக்குள் ஒளிந்து இயங்குகிற மாதிரி, இறைவனும் உயிர்களுக்கு எல்லாம் மறைந்து இயங்குகிறான்.

இப்படியெல்லாம் சங்கீதத்தைப் பார்க்கும்போது அது நம்மைச் சேர்ந்ததல்ல,— நம்முடைய ஜட உலகத்தைச் சேர்ந்ததல்ல என்று சொல்லத் தோன்றும்.

தேவலோகத்திலிருந்து இறங்கி வந்து நம்மைப் பரவசப்படுத்தி விட்டு மறுபடியும் பறந்து தன்னுடைய சொந்த இடத்திற்குப் போகும் தேவதை என்றே சங்கீதத்தைக் கருதத் தோன்றும்.

இந்த விஷயத்தை அட்டைப் படம் சித்திரிக்கிறது. சங்கீதத்தை வானுலகைச் சேர்ந்த தெய்வ அணங்காக எழுதிக் காட்டுகிறது. மென்மையிலும் மென்மையான வஸ்து சங்கீதம் என்பதை இசை அணங்கின் உடைகளின் மென்மையும் அசைவும் குறிப்பிடுகின்றன.

பரவசமாய்க் கேட்டு அனுபவித்த சங்கீதத்தை மனதில் வைத்துக் கொண்டு பார்க்க வேண்டும் படத்தை.

★ ★ ★ *வடக்கே யிருந்து வயது சென்ற உஸ்தாது பயாஸ்கானைக் கச்சேரி செய்ய அழைப்பதேன்? நம் ஊர்க் கிழப்புலியான டைகர் வரதாச்சாரியார் அவர்களைக் கச்சேரி செய்யக் கேட்டுக் கொள்ளாதது ஏன்?— இந்தப் பிரச்னையைப் பிரசித்தி வாய்ந்த கலைச்சுவை ஆசிரியரும் சங்கீத ரஸிகருமான ஸ்ரீ எஸ். வி. வி. அவர்கள் பின்வரும் கட்டுரையில் பிரஸ்தாபித்திருக்கிறார்.* ★ ★ ★

# வித்வத் சபையும் சங்கீதக் கச்சேரியும்

**எஸ். வி. வி.**

இந்தக் காலத்தில் சங்கீதம் விருத்தியாகி இருக்கிறது என்று ஒரு சாரார் சந்தோஷமாய்க் கொண்டாடுகிறார்கள். அநேகமாக இவர்கள் இந்தத் தலைமுறையாளர்களாகவே இருப்பார்கள். என்னைப்போல் வயது சென்றவர்கள் பலபட்டரை விஷயங்கள் சங்கீதத்தில் புகுந்து சங்கீதம் குட்டிச்சுவராகப் போய்விட்டது என்பார்கள். இந்த அபிப்பிராயங்கள் அவரவர்கள் கேட்டுப் பழகிய அனுபவத்தைப் பொறுத்தனவாக இருக்கும்.

வாயிலிருந்து பாட்டு என்று வருவதெல்லாம் சங்கீதம்தான். அது எந்தக் காலத்திலும் பலவகைப் பட்டிருந்தது. நாடக சங்கீதம், பஜனை சங்கீதம், நாட்டிய சங்கீதம், பக்திரஸம் ததும்பும் சங்கீதம் ஆகிய இவை போன்றவைகள் எல்லாமே சங்கீதம்தான். கச்சேரிகளில் தொன்று தொட்டுக் கலைச் சங்கீதமே பாடப்பட்டு வருகிறது. அதனுடைய முக்கிய நோக்கம் கலையைப் பிரகாசிக்கச் செய்வதே. அது வெகுகாலம் அப்பியசித்து, ராக லக்ஷணங்களை உணர்ந்து, சாரீரத்தைப் பக்குவப்படுத்தி, மூக்கால் பாடுவது வாயைத் திறந்து பாடுவது என்பன போன்ற நாதக் குற்றங்கள் இல்லாமல், லக்ஷண சுத்தத்தோடும் சுருதி சுத்தத்தோடும் காலப் பிரமாணம் தவறாமலும் பாடக்கூடியவர்களால் கையாளப்பட வேண்டியது. கச்சேரி சங்கீதம் என்றால் கலைச் சங்கீதமே. ஆகையால்தான் அதில் வேறு சங்கீதத்தைப் புகவிடுவதில்லை. கலைச் சங்கீதம் முழுமையுமே சங்கீதத்துக்கு ஏற்பட்டிருக்கும் லக்ஷணங்களையும் விதிகளையும் ஒட்டிக் கட்டப்பட்டது. லக்ஷண சுத்தத்தினாலேயே அது இன்பத்தை விளைவிப்பது; ஜனங்கள் அந்த லக்ஷணங்களை விவரமாய் அறியாமற் போனாலும், கேட்டுக் கேட்டு அனுபவத்தில் ஞானத்தை யடைந்து ரஸிக்க யோக்கியதை உள்ளவர்களாகிறார்கள்.

சென்னைப் பட்டணத்திலும் வெளியூர்களிலும் ஏற்பட்டு நடந்து வரும் சபைகளெல்லாம் இந்தக் கலைச் சங்கீதத்தைச் சர்வ ஜனங்களுக்கும் வழங்குவதிலேயே ஈடுபட்டிருக்கின்றன. கலைச் சங்கீத வளர்ச்சிக்கென்றே சென்னை வித்வத் சபை ஏற்பட்டிருக்கிறது. மற்ற சபைகள் 'கேட்கலைக்ஷ'னைத் தீவிரமாக நோக்குவது சகஜமே. சங்கீதம் பணம் சம்பாதித்தால் தான் அதனுடைய வாழ்நாளும் நீளும். ஆனால் வித்வத் சபையின் நோக்கம் வேறு விதமாக இருக்க வேண்டியது அத்தியாவசியம். அவர்கள் கலை நோக்கத்துடன்தான் பாடுபட்டு வருகிறார்கள். புராதன ராகலக்ஷணக் கிரந்தங்களைப் பரிசோதித்து அச்சிட்டு வருகிறார்கள். சங்கீதப் பயிற்சிக்காகக் காலேஜ் ஒன்று நடத்தி வருகிறார்கள். ஆனால் அநேக இடங்களில் நடந்து வரும் சங்கீத வித்தியாசாலைகளைவிட இவர்கள் நடத்தும் வித்தியாசாலை எந்த விதத்தில் மேன்மைப்பட்டது என்று விளங்கவில்லை. டிசம்பர் கடைசி வாரத்தில் ஒரு பெரிய மகாசபை கூட்டி அதில் ராக லக்ஷணங்களைத் தீர்மானிப்பதற்கு வித்வத் சபை ஒன்றும் நடத்தி வருகிறார்கள். அதில் ராக லக்ஷணங்களையும் ராகம் தாளம் பல்லவி தானம் பாடுவது முதலிய விஷயங்களையும் சர்ச்சை செய்து முக்கியமாகப் பழைய நூல்களை ஆராய்ச்சி செய்து சம்பிரதாயத்தை நிலைநாட்ட வெகு பாடு படுகிறார்கள். ஆனால் அங்கு செய்யும் தீர்மானப்படி வித்வான்கள் பாடுகிறார்கள் என்று சொல்வதற்கில்லை. விவாதங்களில் கலந்து கொண்ட வித்வான்கள்கூட தாங்கள் பழகி வந்த சொந்த வழிகளிலேயே போய்க் கொண்டிருப்பதாகத் தான் காணப்படுகிறது. அவர்கள் தீர்மானப்

படி பாடினார்களா என்று கவனித்து மகா சபை முடிந்தவுடன் சபையில் பாடினவர்கள் நிர்மாணம் தவறிப் பாடியதைச் சுட்டிக் காட்டியும், மகாநாட்டில் நடந்த கச்சேரியின் விஷயமாக மற்ற லக்ஷண விமர்சனங்களையும் சபையாரே வெளியிட்டால் கச்சேரி செய்கிறவர்களின் ஜாக்கிரதைக்கும் அபிவிருத்திக்கும் அனுகூலமாக இருக்கும்.

வித்வத் சபை நடத்தும் கச்சேரிகள் சம்பிரதாய சங்கீதத்தைக் கேட்கவைக்கும் நோக்கத்துடன் முக்கியமாக இருக்க வேண்டும். இரண்டாவதாக, சம்பிரதாய வழிகளில் முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் இளம் வித்வான்களை உற்சாகப்படுத்துவதற்காக இருக்க வேண்டும்.

பலநாள் பாடிப் பிரசித்தி யடைந்திருக்கும் வித்வான்கள் சில வருஷங்களாகச் சங்கீத வித்வத் சபையில் கச்சேரி செய்யவில்லை. டைகர் வரதாச்சாரியார், மழவராயனேந்தல் சுப்பராம பாகவதர், மைசூர் வாசுதேவாச்சாரியார், வீணை சாம்பசிவ அய்யர் போன்ற குரு சிஷ்ய பரம்பரையில் வந்த பழைய வித்வான்களின் பெயர்கள் கச்சேரி நிகழ்ச்சி முறையில் காணப்படவில்லை. அவர்களுக்கு வயதாகிச் சரீர பலமும், தேக பலமும் தளர்ந்திருக்கலாம். ஆகையினால் அநேக ஜனங்கள் அவர்கள் சங்கீதத்தைக் கேட்க வரமாட்டார்கள் என்கிற எண்ணமா? இது காரணமானால், பண வருமானத்தையே உத்தேசித்துச் சங்கீத வித்வத் சபை நடத்துவதாக முடியும். நிகழ்ச்சி முறையில் சேர்ந்திருக்கும் வித்வான்கள் பிரபலஸ்தர்கள் என்பதை நாம் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் அவர்கள் சங்கீதத்தை எந்தச் சபையில் வேண்டுமானாலும் கேட்கலாம். அதற்கு வித்வத் சபையாருடைய ஒத்தாசை வேண்டியதில்லை. பழைய சிரத்தங்களை வித்வத் சபையார் பாராட்டி வருவதைப்போல, பழைய வித்வான்கள் தவறிப் போனால் காலைக்குக் கிடைக்க மாட்டார்கள் என்கிற ஆவலும் அவர்களுக்கு இருக்கவேண்டும். வயது சென்ற ஜனுப் உஸ்தாத் பயாஸ் கானைப் பரோடாவிலிருந்து தருவிக்கும் வித்வத் சபையார் உள்ளூரிலிருக்கும் கலா ரத்னங்களைக் கவனிக்காம லிருப்பது சபைக்கு இருக்கவேண்டிய முக்கிய நோக்கத்தைச் சிறிது நழுவ விட்டதுபோல் தோன்றுகிறது. மேடைக் கச்சேரி வித்வான்களின் முன்னணியில் இருந்தவரும் மூசிரி சுப்பிரமணிய ஐயரின் பெயரைக் கூட நிகழ்ச்சி முறையில் காணோம். அவர் மஹா வைத்தியநாதய்யர் சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவர் அல்லவா?

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ரா.கி

## 58. டால்ஸ்டாய் பண்ணை

காந்திஜி முதன் முறை இங்கிலாந்து சென்றிருந்த போது தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் நலன்களைப் பாதுகாப்பதற்காக அங்கே ஒரு சங்கம் ஸ்தாபித்துவிட்டு வந்தார் அல்லவா? அந்தச் சங்கத்தின் தலைவர் லார்ட் ஆம்த்தில் காந்திஜி இப்போது இங்கிலாந்து வந்ததின் நோக்கத்தைக் கேட்டுத் தெரிந்துகொண்டு ஜெனரல் போதா முதலியவர்களைக் கண்டு பேசினார். ராஜி செய்து வைப்பதற்கு அவர் பெருமுயற்சி செய்தார். ஆனால் வெற்றி காணவில்லை. காரியாம்சத்தில் இந்தியர்களுடைய நன்மைகளைக் கவனித்துக் கொள்வதாகவும், ஆனால் நிறவேற்றுமையை எடுத்துவிடுவது முடியாத காரியம் என்றும் போயர் தலைவர்கள் சொன்னார்கள். ஆசியாக்காரர் சட்டம், குடியேற்றத் தடைச் சட்டம்,—இவற்றை எடுக்கவே முடியாது என்று சொல்லி விட்டார்கள்.

இந்தப் பதிலை லார்ட் ஆம்த்தில் காந்திஜிக்கும் ஹாஜி ஹபீப் சேத்துக்கும் தெரியப்படுத்தினார். "காரியாம்சத்தில் நீங்கள் கேட்கும் வசதிகள் எல்லாம் கிடைத்து விடும். ஆனால் சட்டத்திலேயுள்ள நிற வித்தியாசம இருந்து கொண்டிருக்கும். இந்த உலகத்தில் நாம் கோருவதெல்லாம் கிடைத்துவிடுவதில்லை. சில சமயம் விட்டுப் பிடித்தே யாகவேண்டும். ஆகையால் யோசனை செய்யுங்கள். வெறும் கொள்கைக்காகப் போராட்டத்தை நடத்திக் கொண்டு போவது அவசியமா என்று நன்றாய்ச் சிந்தித்து முடிவு செய்யுங்கள். கூடிய சீக்கிரத்தில் பதில் சொல்லுங்கள்" என்று லார்ட் ஆம்த்தில் கூறினார்.

சேத் ஹாஜி ஹபீப் வெறும் கொள்கைக்காகப் போராடுவதில் அர்த்தமில்லை என்று நினைத்தார். அவர் கூறியதாவது:—

"ஜெனரல் போதா சொல்வதை நான் ஒப்புக் கொள்கிறேன் என்று தெரியப் படுத்துங்கள். தாங்கள் கூறியபடி அவர் இந்திய சமூகத்துக்குச் சௌகரியங்களை அளித்தால் இப்போதைக்கு நான் திருப்தியடைவேன். இந்தியர்களில் சமரசக் கட்சியின் சார்பாக நான் பேசுகிறேன். தென்னாப்பிரிக்கா இந்திய சமூகத்தில் பெரும்பாலோர் நாங்களே. சமூகத்தில் பணவசதியுள்ளவர்களும் நாங்களே. இதற்கு மேலே இந்திய சமூகம் கஷ்டப்படுவதை நாங்கள் விரும்பவில்லை. கொள்கைக்காகப் போராடுவதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்."

ஹாஜி ஹபீப் குஜராத்தியில் பேசினார். அதை வார்த்தை வார்த்தையாகக் காந்திஜி மொழி பெயர்த்துக் கூறினார். கூறிவிட்டு மகாத்மா தமது அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்:—"தாங்கள் எடுத்துக் கொண்ட முயற்சிக்காக நன்றி செலுத்துகிறேன். சேத் ஹாஜி ஹபீப் இந்திய சமூகத்தில் பெரும்பாலோரின் பிரதிநிதி என்பதும் செல்வர்களின் பிரதிநிதி என்பதும் உண்மை. ஏழை இந்தியர்கள்—சிறுபான்மையோர் சார்பாக நான் பேசுகிறேன். நானும் என்னைச் சேர்ந்தவர்களும் உடனே கிடைக்கக்கூடிய வசதிகளுக்காக மட்டும் போராடவில்லை; கொள்கைக்காக உயிரைக் கொடுத்துப் போராடத் தயாராயிருக்கிறோம். தற்கால அநுகூலம், கொள்கை, இந்த இரண்டில் ஒன்றைக் கைவிடவேண்டுமானால் தற்கால அநுகூலத்தையே நாங்கள் கைவிடுவோம். ஜெனரல் போதாவின் வல்லமையை நாங்கள் உணர்ந்திருக்கிறோம், ஆயினும் எங்களுடைய பிரதிக்ஞையை நாங்கள் கைவிட முடியாது. ஆண்டவன் மீது பாரத்தைப் போட்டு விட்டு, என்ன நேருவதா யிருந்தாலும் பொறுமையுடன் கொள்கையைக் கடைப் பிடித்து வருவோம். எங்களுக்காக நீங்கள் மிகவும் பிரயாசை எடுத்திருக்கிறீர்கள். அதை நாங்கள் ஒருநாளும் மறக்க மாட்டோம். ஆனாலும் தங்களுடைய புத்திமதியை நாங்கள் ஏற்க முடியவில்லை. ஜெனரல் போதாவிடம் ஹாஜி ஹபீப் கூறிய பதிலையும் நான்

கூறும் பதிலையும் தனித் தனியே தெரிவித்து விடுங்கள். அதற்குப் பிறகு நாங்கள் எங்களுக்கு உதவி செய்ய வேண்டுமென எதிர்பார்க்க மாட்டோம்."

இதற்கு வார்ட் ஆம்தில் "அப்படி நீங்கள் நினைக்க வேண்டாம். கொள்கைக்காக நீங்கள் போராடுவதென்று தீர்மானிக்கும் பட்சத்தில் அதற்காக உங்களுக்கு உதவி செய்வதை நிறுத்த மாட்டேன். இங்கேயுள்ள கமிட்டியின் தலைவனாக இருந்து என்னாலியன்றவரை மேலும் உங்களுக்கு உதவி செய்து வருவேன். இங்கே எனக்கு உள்ள செல்வாக்கையெல்லாம் உங்களுக்கு உதவி செய்யப் பயன்படுத்துவேன்" என்று சொன்னார்.

இந்தச் சம்பாஷணையிலிருந்து காந்திஜியின் குணதிசயத்தில் இரண்டு அம்சங்கள் தெளிவாகின்றன அல்லவா? ஹாஜி ஹபீப் சேத்தும் காந்திஜியும் வெவ்வேறு அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். எனினும் அவர்களுடைய சிநேகிதத்துக்கு எந்த விதமான குந்தகமும் ஏற்படவில்லை. ஹாஜி ஹபீப் காந்திஜியிடம் பூரண நம்பிக்கை வைத்திருந்தார். அதனாலேயே தம் அபிப்பிராயத்தை மொழிபெயர்த்துச் சொல்லும்படி மகாத்மாவைக் கேட்டுக் கொண்டார். மகாத்மாவும் தம் அபிப்பிராயத்துக்கு மாறுபட்ட அபிப்பிராயத்தை உள்ளது உள்ளபடி மொழிபெயர்த்துச் சொல்வதற்குத் தயங்கவில்லை.

வார்ட் ஆம்தில் ஆங்கிலேயராயிருந்தும் அவர் உதவி செய்வதாக முன் வந்ததைக் காந்திஜி மகிழ்ச்சியுடன் வரவேற்று நன்றி செலுத்தினார். அவரிடம் காந்திஜி வைத்த நம்பிக்கை வீண் போகவில்லை. இறுதி வரையில் வார்ட் ஆம்தில் தென்னாப்பிரிக்கா இந்தியரின் கட்சியில் நின்று தம்மாலான உதவிகளைச் செய்து கொண்டிருந்தார். போராட்டம் நடந்து கொண்டிருந்த வரையில் காந்திஜியுடன் அவர் மிக்க சிநேக பாவத்துடன் பழகி வந்தார்.

* * *

இங்கிலாந்துக்குத் தூது போன காரியத்தில் வெற்றி பெறாமல் காந்திஜி தென்னாப்பிரிக்கா திரும்பினார். ஆனால் வேறொரு விதத்தில் அந்தப் பிரயாணம் அளவில்லாத பயனை அளித்தது. இங்கிலாந்தில் தங்கியிருந்தபோது இந்தியாவின் சுதந்திரத்தில் பற்றுக்கொண்ட சில இந்திய இளைஞர்களை மகாத்மா சந்தித்தார். அவர்களுடன் கலந்து பேசினார். அந்த இளைஞர்கள் பலாத்காரத்தில் நம்பிக்கை கொண்ட புரட்சிக்காரர்கள். இந்தியாவின் சுதந்திரத்துக்காக எதுவும் செய்ய அவர்கள் தயாராயிருந்தார்கள். அவர்களுடன் பேசியதிலிருந்து காந்திஜிக்கு இந்தியாவின் சுதந்திரப் பிரச்னையைப் பற்றி அறிந்து சிந்தனை செய்ய வசதி ஏற்பட்டது. "இந்தியா சுயராஜ்யம் பெற்றே தீர வேண்டும். ஆனால் பலாத்காரமும் அராஜகமும் அதற்கு வழியல்ல; அஹிம்சையும் சத்தியாக்கிரஹமும் தான் வழிகள்" என்ற முடிவுக்குக் காந்திஜி வந்தார். இந்த முடிவுகளை ஆதாரமாகக் கொண்டு "ஹிண்ட் ஸ்வராஜ்" (இண்டியன் ஹோம் ரூல்) என்ற புத்தகத்தை இங்கிலாந்திலிருந்து தென்னாப்பிரிக்காவுக்குத் திரும்பி வரும் போது கப்பலில் எழுதி முடித்தார்.

• • •

தென்னாப்பிரிக்காப் போராட்டத்தை இனித் தொடர்ந்து நடத்தும் முறையைப் பற்றியும் கப்பலில் காந்திஜி சிந்தனை செய்தார். போராட்டம் இலகுவில் முடிகிறதாயில்லை. நீடித்த காலம் நடந்தே தீர வேண்டும். பணக்கார வியாபாரிகளின் ஆதரவு இனிமேல் இயக்கத்துக்குக் கிடைப்பது துர்லபம். ஏழை இந்தியர்களை வைத்துக் கொண்டே நடத்த வேண்டும். அவர்களிலும் எத்தனை பேர் நிலைத்து நிற்பார்கள் என்று தெரியாது. ஆனால் சத்தியாக்கிரஹத்தின் சக்தியைப் பற்றி மகாத்மாவுக்கு இதற்குள்ளே மகத்தான நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. சத்தியாக்கிரஹத்தின் சக்தி ஆட்களின் தொகையைப் பொறுத்ததல்லவென்றும், அதைக் கடைப்பிடிப்போர் ஒரு சிலராயிருந்தாலும் அவர்களுடைய உறுதியைப் பொறுத்தது என்றும் மகாத்மா நிச்சயம் பெற்றிருந்தார். ஆகையால் எத்தனை பேர் போராட்டத்தில் நிலைத்து நிற்பார்கள் என்பதைப் பற்றிக் காந்திஜி கவலைப்படவில்லை. ஆனால் போராட்டத்தில் கலந்து கொண்ட ஏழைக் குடும்பங்களின் கதி என்ன என்பது மகாத்மாவுக்குப் பெரும் கவலை அளித்தது. அவர்களுக்கு உண்ண உணவும் தங்க இடமும் கொடுத்து உதவ வேண்டாமா?

தென்னாப்பிரிக்கா சேர்ந்ததும் இதைப் பற்றிச் சில நண்பர்களுடன் கலந்து ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தார். டர்பனுக்குப் பக்கத்தில் போனிக்ஸ் பண்ணை ஏற்படுத்தியது போல் ஜோகானிஸ்பர்க்குக்குச் சமீபமாக 'டால்ஸ்டாய் பண்ணை' என்பதாக ஒரு ஆசிரமம் ஸ்தாபிக்கத் தீர்மானித்

தார். காந்திஜியின் அந்தியந்த நண்பர்களில் ஒருவரான மிஸ்டர் காலன்பாக் என்னும் ஜெர்மானியர் 1,100 ஏக்கரா விஸ்தீரணமுள்ள ஒரு விவசாயப் பண்ணையை வாங்கியிருந்தார். அந்த இடத்தில் 1910-ம் வருஷம் மே மாதம் 10-ம் தேதி டால்ஸ்டாய் பண்ணை ஸ்தாபிக்கப்பட்டது.

சத்தியாக்கிரஹ இயக்கத்தில் சேர்ந்த காரணத்தினால் ஜீவனோபாயத்தை இழந்த சத்தியாக்கிரஹிகளும் அவர்களுடைய குடும்பத்தினரும் டால்ஸ்டாய் பண்ணையில் குடியேறினார்கள். எல்லாரும் கையால் உழைத்துப் பாடுபட வேண்டும் என்றும் வீட்டு வேலைக்காக வேலைக்காரர்கள் வைத்துக் கொள்ளக் கூடாது என்றும் நியதி ஏற்பட்டது. குடியிருப்பு இடத்திலிருந்து ஐந்நூறு கஜ தூரத்தில் இருந்த நீர் ஊற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வரவேண்டியிருந்தது. ஆசிரம வாசிகள் காவடி கட்டித் தோள்மீது சுமந்து தண்ணீர் கொண்டு வந்தார்கள். ஸ்திரீகள் சமையல் வேலையின் பொறுப்பை ஏற்றார்கள். இப்படியே பாத்திரங்கள் துலக்குதல், இருப்பிடத்தைச் சுத்தம் செய்தல், தெருக் கூட்டுதல் முதலிய சகல வேலைகளையும் ஆசிரம வாசிகள் பகிர்ந்து கொண்டு செய்தார்கள். ஆசிரமத்தில் மிக எளிய உணவே அளிக்கப்படும் என்று ஏற்பாடு. ஆனாலும் உணவு விஷயத்தில் ஒரு சிக்கலான பிரச்னை ஏற்பட்டது. ஆசிரமத்தில் வந்து குடியேறியவர்களில் குஜராத்தியர், தமிழர், ஆந்திரர், மற்ற வட மாகாணத்தார் எல்லாரும் இருந்தனர். அவ்விதமே ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்துவர்கள் ஆகிய நாலு மதத்தினரும் இருந்தார்கள். கிறிஸ்துவர்களும் முஸ்லிம்களும் புலால் உண்பவர்கள். அவர்கள் புலால் உணவு வேண்டும் என்று சொல்லும் பட்சத்தில் இரண்டு சமையல் அறைகளும் இரண்டு விதமான சமையல்களும் அவசியமாகும். எனினும் புலால் உணவு அருந்திப் பழக்கப்பட்டவர்களைத் தாவர உணவுதான் அருந்த வேண்டும் என்று கட்டாயப்படுத்தக் காந்திஜி விரும்பவில்லை. அவர்கள் விரும்பினால் புலால் உணவுக்கு ஏற்பாடு செய்யத் தயாராயிருந்தார். ஆயினும் அதனால் ஏற்படக்கூடிய அசௌகரியங்களை அவர்களுக்குக் காந்திஜி எடுத்துச் சொல்லி, கறிகாய் உணவுடன் திருப்தி அடைய முடியுமா என்று கேட்டார். கிறிஸ்துவர்களும் முஸ்லிம்களும் — ஸ்திரீகள் உள்பட — பொது சௌகரியத்தை முன்னிட்டுப் புலால் உணவு தங்களுக்கு வேண்டியதில்லை யென்று உறுதியாகச் சொல்லி விட்டார்கள்.

## இலக்கியம் வளர்த்தவர்



வளரும் தமிழ் யுகத்தில் சிறு கதை எழுத்தாளர் பலர் தோன்றினர். அவர்களில் சிறந்த ஒருவர் 'ருஷி' என்னும் புனை பெயர் கொண்ட ஸ்ரீ எஸ். ஜே. ராமலிங்கம். முதன் முதலில் தமிழ்நாட்டில் நடைபெற்ற சிறு கதைப் போட்டியில் 'ருஷி' முதற் பரிசு ரூபாய் நூறு பெற்றார். இந்தப் பரிசை அவருக்கு அளித்த கதையின் பெயர் 'ஊமைச்சி காதல்'. பரிசுக் கதையைத் தேர்ந்தெடுப்பதற்காக நியமிக்கப்பட்டிருந்த அறிஞர்கள் 'ஊமைச்சி காதல்' என்னும் கதையைப் படித்ததும், "இது என்ன விந்தை! கவி ரவீந்திரரின் சிறு கதையைப்போல் இருக்கிறதே!" என்று அதிசயித்தார்கள். அதற்குப் பிறகு 'ருஷி' பல சிறு கதைகளை எழுதித் தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தினார். பல பத்திரிகைகளில் தொண்டு செய்தார். கடைசியாக அவர் சொந்தப் பொறுப்பில் நடத்திய "கதைமலர்" மிக அருமையான சிறு கதைகளைத் தாங்கிக் கொண்டு சில இதழ்கள் வெளிவந்தது. தமிழ்த் தாய்க்கு இத்தகைய அருந்தொண்டு புரிந்தவர் நோய்வாய்ப்பட்டுச் சமீபத்தில் காலமானார் என்று அறிந்து மிகவும் துயருறுகிறோம். ஆத்மாவுக்கு மரணமில்லை என்ற நம்பிக்கை உடையோமாதலால் 'ருஷி' மீண்டும் இச் செந்தமிழ் நாட்டில் பிறந்து வளர்ந்து நவநவமான சிறு கதைகளை எழுதுவார் என்று எதிர்பார்க்கிறோம்.




## ஆறாம் அத்தியாயம்

## கலியாணம் அவசியமா?

சாஸ்திரியார் மாடி ஏறிச் சென்றதும், காமாட்சி அம்மாள் வார்த்தைகளைப் பொழிந்தாள்:— "சூரியா! இது என்ன இப்படிப்பட்ட காரியம் செய்துவிட்டாய்? இந்த வயதில் சந்நியாசமாவது? இவர் ஓயாமல் 'சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போகிறேன்; 'சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போகிறேன்' என்று பயமுறுத்திக் கொண்டிருக்கிறார். ஆனால் வீட்டை விட்டு அசைகிற வழியாகக் காணோம். வயதாக ஆக, பாச பந்தம் அதிகமாகி வருகிறது. மூத்த நாட்டுப் பெண் வேறு வந்து செல்லம் கொஞ்ச ஆரம்பித்திருக்கிறாள். நீ இந்த வயதில் காஷாயம் வாங்கிக் கொண்டாயே? கொஞ்சம்கூட நன்றாயில்லை. உன்னை எப்படிக் கூப்பிடுவது என்றே எனக்குத் தெரியவில்லை. 'சுவாமிகளே! வாங்கள்! போங்கள்!' என்று மரியாதையாகச் சொல்ல வேண்டுமோ, என்னமோ?" என்றாள்.

"மாமி! அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். தாராளமாய்ச் 'சூரியா' என்றும் 'வா' 'போ' என்றும் சொல்லுங்கள். உங்களிடம் நிஜத்தைச் சொல்லிவிடுகிறேன். ஒரு காரியார்த்தமாக இந்த வேஷம் போட்டுக் கொண்டேன். உண்மையில் நான் சந்நியாசம் வாங்கிக் கொண்டு சாமியார் ஆகிவிடவில்லை" என்றான் சூரியா.

"இது என்ன கூத்து? போயும் போயும் எதற்காக இந்த வேஷம் போட்டுக் கொண்டாய்? இந்தக் காலத்துப் பிள்ளைகளின் காரியமே வேடிக்கையாகத்தான் இருக்கிறது. ஒருவேளை சினிமாவிலே, கினிமாவிலே சேர்ந்திருக்கிறாயா, என்ன?"

"அதெல்லாம் இல்லை, மாமி! நான் சுயராஜ்ய இயக்கத்தில் சேர்ந்திருக்கிறேன் அல்லவா?"

"சுயராஜ்யமும் ஆச்சு, மண்ணாங்கட்டியும் ஆச்சு! இந்தக் காஷாய வேஷத்தைக் கலைத்துவிட்டு மறு காரியம் பார்! உனக்குக் கலியாணத்துக்குப் பெண் பார்த்து வைத்திருக்கிறேன். உன்னை இந்தக் கோலத்தில் பார்த்ததும் எனக்குப் பகீர் என்றது."

"மாமி! கலியாணம் அவ்வளவு அவசியமான காரியமா? கலியாணம் செய்து கொண்டவர்கள் எல்லாரும் சந்தோஷமாயிருக்கிறார்களா?" என்று சூரியா கேட்டான்.

"எத்தனையோ பேர் கலியாணம் செய்துகொண்டு பின்னையும் குட்டியுமாய்ச் சந்தோஷமாய்த்தானிருக்கிறார்கள். சிலபேருடைய தலையில் எழுத்து,—சந்தோஷமாயிருக்க முடிகிறதில்லை. அப்படிப் பார்த்தால் உலகத்திலே யார்தான் எப்போதும் சந்தோஷமாயிருந்தார்கள்? இராமர் சீதையைக் கலியாணம் செய்து கொண்டு எவ்வளவோ கஷ்டப்பட்டார். அதனால் இராமர் கலியாணமே செய்து கொண்டிருக்கக் கூடாது என்று சொல்ல முடியுமா?" என்றாள் காமாட்சி அம்மாள்.

"இராமரும் சீதையும் ஒருவருக்கொருவர் எவ்வளவோ பிரியமாயிருந்தார்கள். அதனால் அவர்கள் சந்தோஷமாயிருந்தார்கள். தம்பதிகள் அன்யோன்யமாயிருந்து மற்றவர்களால் எவ்வளவு கஷ்டம் நேர்ந்தாலும் பொறுத்துக் கொள்ளலாம்; சந்தோஷமாகவும் இருக்கலாம். ஆனால் இந்தக் காலத்துத் தம்பதிகள் அப்படி இல்லையே?" என்றான் சூரியா.

"நீ எதைக் குறிப்பிட்டுச் சொல்லுகிறாய் என்று எனக்குத் தெரிகிறது, சூரியா! என் பிள்ளையும் நாட்டுப் பெண்ணும் அன்யோன்யமாயில்லை என்றுதானே சொல்கிறாய்? அது வாஸ்தவந்தான். பெரியவர்கள் சொல்லுகிறதைக் கேட்காமல் தான் தோன்றித்தனமாகக் காரியம் செய்ததினால் வந்த வினை இது. கலியாணம் நிச்சயம் செய்வது என்றால், ஜாதகம் பார்த்துச் செய்ய வேண்டும் என்று எதற்காகப் பெரியவர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்? இந்த மாதிரி யெல்லாம் ஏடாகூடமாக ஆகக்கூடாது என்றுதான். நான் அப்போதே அடித்துக் கொண்டேன்: 'எல்லாவற்றுக்கும் ஜாதகம் வாங்கிப் பார்த்து விடலாம்' என்று நான் சொன்னதை யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. எப்போது பார்த்தாலும் சாஸ்திரம், சம்பிரதாயம் என்று சொல்லிக் கொண்டிருக்கும் இந்தப் பிராமணருக்குக் கூட அப்போது புத்தி எங்கேயோ போய்விட்டது! உன் அத்தங்காள் ஜாதகத்தில் என்ன தோஷம் இருந்ததோ, என்னமோ? உன் தங்கை லலிதாவைப் பார்ப்பதற்காகத்தானே நாங்கள் உங்கள் ஊருக்கு வந்திருந்தோம்? லலிதாவின் ஜாதகமும் ராகவனுடைய ஜாதகமும் பொருந்தியிருந்தது. அப்படி நடந்திருந்தால் இந்தக் கஷ்டமெல்லாம் வந்திராது!" என்றாள் காமாட்சி அம்மாள்.

"இப்போது என் அத்தங்கா படுகிற கஷ்டத்தை யெல்லாம் என் தங்கை பட்டிருப்பாள்!" என்றான் சூரியா.

காமாட்சி அம்மாளுக்குக் கோபம் வந்து விட்டது "நன்றாகச் சொன்னாய், சூரியா! உன் அத்தங்காள் பரம சாது, ராகவன்தான் அவளைக் கஷ்டப்படுத்துகிறான் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயாக்கும்! கலியாணம் ஆன புதிதில் நானும் உன் அத்தங்காளைச் சாது என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன். இப்படிப்பட்ட நாட்டுப் பெண் எனக்குக் கிடைத்தாளே என்று சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தேன். போகப் போகத்தான் தெரிந்தது. உன் அத்தங்காள் எப்படிப்பட்ட ராட்சஸி என்று. அவளுக்குச் சீதை என்று பெயர் வைத்தது ரொம்பத் தப்பு, சூரியா! சூர்ப்பணகை, தாடகை என்று பெயர் வைத்திருக்க வேண்டும்!" என்றாள்.

"மாமி! சாதுப் பெண்ணாயிருந்தவள் எப்படித் திடீரென்று ராட்சஸியாகி விட்டாள்? அதற்கு ஏதாவது காரணம் இருக்க வேண்டும் அல்லவா?"

"காரணம் என்ன காரணம்? அவளைச் சாதுப் பெண் என்று நாம் எல்லாரும் நினைத்துக் கொண்டிருந்தோமே, அதுதான் தப்பு! உலகத்தில் துஷ்டைகள் எத்தனையோ பேரை நானும் பார்த்திருக்கிறேன். ஆனால் உன் அத்தங்காளைப்போல் பார்த்ததேயில்லை! ஒவ்வொரு சமயம் எனக்குப் பயமாயிருக்கிறது, சூரியா! ஏதாவது விஷத்தைக் கிஷத்தைக் கலந்து..."

"ஐயையோ! அப்படிச் சொல்லாதீர்கள். அம்மா! எப்பேர்ப்பட்ட ராட்சஸியாக இருந்தாலும் புருஷனுக்கு விஷம் வைத்துக் கொல்

லும்படி அவ்வளவு பாதகியா யிருப்பாளா?" என்று அலறினான் சூரியா.

"மெள்ளப் பேசடா, அப்பா! மெள்ளப் பேசு! புருஷனுக்கு விஷம் வைத்துவிடுவாள் என்று நான் சொல்லவில்லையே! கிராமாந்தரத்துப் பெண்கள் சிலர் புருஷனை வசப்படுத்தி வைத்துக் கொள்வதற்கு என்று எண்ணிக்கொண்டு மருந்து வைத்து விடுவதுண்டு. அது புருஷனுக்கு யமனாக முடியும். உன் அத்தங்காள் அவ்வளவு அசடும் அல்ல; அப்படிச் செய்யவும் மாட்டாள். தான் விஷத்தைக் கலந்து குடித்து விட்டு ராகவன் பேரில் பழியைப் போட்டு விடுவாளோ என்றுதான் பயப்படுகிறேன். 'புருஷன் படுத்தும் கொடுமை தாங்காமல் செத்துப் போகிறேன்' என்று எழுதி வைத்து விட்டுச் செத்தாலும் சாவாள்! அவளுடைய மூர்க்கத்தனத்தை நினைத்தால் சில சமயம் எனக்கு இப்படியெல்லாம் தோன்றுகிறது......"

"மாமி! விஷங்குடித்துச் செத்துப் போக வேண்டும் என்று நினைப்பதற்கு சீதாவின் மனது எவ்வளவு வெறுத்துப் போயிருக்க வேண்டும்? அப்படி மனது வெறுப்பதற்குக் காரணமில்லாமலா இருக்கும்? உங்கள் பிள்ளை பேரில் தப்பே இல்லையென்றால், வேறு என்ன காரணம் இருக்க முடியும்?" என்றான் சூரியா.

இதற்குக் காமாட்சியம்மாளின் பதில் சொல்மாரியாக வந்தது:—

"என் பிள்ளை பேரில் தப்பு இல்லையென்று யார் சொன்னது? எவ்வளவோ தப்பு உண்டு. உன் தங்கையைப் பார்ப்பதற்காகப் போனவன், இந்த ரதியைத் தெருவிலே பார்த்து விட்டு மயங்கிப் போய் 'இவளைத்தான் கலியாணம் செய்து கொள்வேன்' என்றானே? அது பெரிய தப்புத்தான். ஒரு செப்புக்காசு வரதட்சணை இல்லாமல் கலியாணம் செய்து கொண்டதும் தப்புத்தான். குப்பையில் கிடந்தவளைக் கொண்டு போய்க் கோபுரத்தில் வைத்தானே, அதுவும் தப்புத்தான். அந்த நாளில் எவ்வளவோ நான் அடித்துக் கொண்டேன், 'இவ்வளவு இடங்கொடுக்காதே!' என்று; இவன் கேட்கவில்லை. ஆக்ரா எங்கே, சிம்லா எங்கே, காஷ்மீர் எங்கே என்று அழைத்துக் கொண்டு திரிந்தான். என்னைக் காசிக்கு அழைத்துக் கொண்டு போக அவனுக்குச் சாவகாசம் கிடைக்கவில்லை. சீதாவை லண்டனுக்கு அழைத்துக் கொண்டு போகக்கூடத் தயாரா யிருந்தான். வைஸராய் வீட்டுப் பார்ட்டிகளுக்கு அழைத்துக்கொண்டு போனான். இங்கிலீஷ் படிக்க வைத்தான். அன்னிய புருஷர்களோடு கை குலுக்கவும் ஒரே சோபாவில் உட்கார்ந்து பேசவும் மோட்டார் கார் ஓட்டவும் கற்றுக் கொடுத்தான். அப்படியெல்லாம் செய்த தப்புகளின் பலனை இப்போது அநுபவிக்கிறான். அவனுடைய ஜாதகத்தில் அப்படி எழுதி யிருந்தது! இன்னொரு புருஷனா யிருந்தால் இப்படிப்பட்ட பெண்டாட்டியை விறகுக் கட்டையால் அடித்துத் துரத்திவிட்டு வேறு கலியாணம் செய்து கொண்டிருப்பான்!......"

இந்த ரீதியில் காமாட்சி அம்மாளுடன் பேசுவதில் பயனில்லையென்று சூரியா அறிந்துகொண்டான். பேச்சை வேறு பாணியில் ஆரம்பித்தான்.

"மாமி! நான் ஏதோ என் அத்தங்காளுக்குப் பரிந்து பேசுவதாகவும் உங்கள் பிள்ளையைக் குற்றம் சொல்வதாகவும் நீங்கள் எண்ணிக் கொள்ளக் கூடாது. சீதா தாயில்லாப் பெண் என்பது உங்களுக்குத் தெரியும். தகப்பனார் உயிரோடிருக்கிறாரா, இல்லையா என்பது ஒருவருக்கும் தெரியாது. உங்களையும் உங்கள் பிள்ளையையும் தவிர அவளுக்குக் கதி கிடையாது. அடித்து விரட்டினால் குளத்திலே கிணற்றிலே விழுந்து சாக வேண்டியதுதான். சீதாவை உங்கள் பிள்ளைக்குக் கலியா



ணம் செய்து கொடுப்பதற்கு நானும் ஒரு வகையில் பொறுப்பாயிருந்தவன். நான் வற்புறுத்திச் சொன்ன படியினாலேதான் என் அப்பா அம்மா இந்தக் கலியாணத்துக்குச் சம்மதித்தார்கள். சீதாவின் தாயாரையும் நான்தான் சம்மதிக்கப் பண்ணினேன். என் அத்தையை உங்களுக்கு ஞாபகமிருக்கிறதல்லவா? வாழ்நாளெல்லாம் கஷ்டப்பட்டவள். 'நான்தான் கஷ்டப்பட்டே காலங் கழித்துவிட்டேன். சீதாவாவது நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட்டுச் சௌக்கியமாயிருக்கட்டும்' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாள். இந்தக் கலியாணத்தை நடத்தி வைத்ததற்காக என்னை ஆயிரம் தடவை 'மகாராஜனாயிரு!' என்று வாழ்த்தினாள். அதையெல்லாம் நினைத்து, இப்போது உங்கள் பிள்ளையும் நாட்டுப் பெண்ணும் இருக்கிற நிலைமையையும் எண்ணும்போது எனக்கு எவ்வளவோ துக்கமாயிருக்கிறது. அதனால் நான் எடுத்துக்கொண்ட முக்கியமான வேலைகள் கூடத் தடைப்பட்டுப் போகின்றன. ஏதாவது முயற்சி பண்ணி உங்கள் பிள்ளையும் சீதாவும் சந்தோஷமாயிருக்கப் பண்ண வேண்டும் என்று எனக்கு ஆசை. அதனாலேதான் உங்களிடம் வந்தேன். சீதா என்ன தப்புச் செய்கிறாள் என்று தெரிந்தால் அவளுக்குப் புத்தி சொல்லித் திருப்ப முயற்சி செய்வேன்."



சூரியாவின் இந்த நயமான பேச்சினால் காமாட்சி அம்மாளின் கோபம் கொஞ்சம் தணிந்தது.

"எனக்கும் அந்த ஆசை இல்லையா, சூரியா! ராகவனும் சீதாவும் முன்போல் சந்தோஷமாக இருந்தால் அதைக் காட்டிலும் எனக்குச் சந்தோஷம் வேறு கிடையாது. ஆனால் காரணம் என்று ஒன்று இருந்தால் தானே சொல்வதற்கு? மனதிற்குள் அவர்களுக்கு ஒருவர் பேரில் ஒருவர் பிரியம் இருக்கிறது என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும். ஆனால் தினம் பொழுது விடிந்தால் சண்டையும் ரகளையும் நடப்பதில் குறைவில்லை. எல்லாவற்றுக்கும் உன் அத்தங்காளின் வாயாடித்தனந்தான் காரணம், சூரியா! வருகிறபோது பேசவே தெரியாத ஊமையைப் போல வந்தாளே, அவளுக்கு இத்தனை வாய் எப்படி வந்ததோ எனக்கே ஆச்சரியமாய்த்தானிருக்கிறது அவன் ஒன்று சொன்னால் இவள் நாலு சொல்லுவது என்று ஏற்பட்டு விட்டது. அவன் எது சொன்னாலும் அதற்கு இவள் மறுத்துச் சொல்லாமல் விடுவதில்லை. எங்கேயாவது இவளை அழைத்துப் போகாவிட்டால் 'ஏன் அழைத்துப் போகவில்லை?' என்று சண்டை பிடிக்கிறது; அழைத்துக் கொண்டு போனால் திரும்பி வரும்போது 'ஏன் அழைத்துக் கொண்டு போனீர்கள்?' என்று சண்டை பிடிக்கிறது; 'ஏன் அவளோடு பேசினீர்கள்!' 'ஏன் இவளோடு பேசினீர்கள்?' என்று ஓயாமல் பிடுங்கி எடுக்கிறது. வெளியிலே வாசலிலே போய் உத்தியோகம் பார்த்து விட்டு வருகிறவனை இப்படிப் போட்டு வதைத்தால் அவன் தான் என்ன செய்வான்? சில சமயம் அவனுக்கும் ரௌத்ராகாரம் வந்து விடுகிறது. கோபம் வந்திருக்கும் வேளையிலாவது எதிர்த்துப் பேசாமலிருக்கத் தெரிகிறதா? அதுவும் இல்லை. சூரியா! உனக்குத்தான் அந்தத் தாரிணி என்கிற பெண்ணை

சூரியாவின் மனதிற்குள் அது சீதாவின் ராட்சதத்தனமா, அல்லது தன் புருஷனைக் காட்டிக் கொடுக்கக் கூடாது என்ற நல்ல எண்ணத்தினால் அப்படிச் செய்தாளா என்ற சந்தேகம் தோன்றியது. அதைப் பற்றிக் காமாட்சி அம்மாளிடம் வாதிப்பதில் பயனில்லை என்று தீர்மானித்து, "போனதெல்லாம் போகட்டும், அம்மா! நான் நாளைக் காலை டில்லி புறப்படுகிறேன். டில்லி போய்ச் சேர்ந்ததும் சீதாவைப் பார்த்துப் பேசிவிட்டு உங்களுக்குத் தகவல் தெரிவிக்கிறேன். எப்படியாவது தகராறைத் தீர்த்து வைத்து உங்கள் பிள்ளையும் நாட்டுப் பெண்ணும் நன்றாயிருக்கும்படி செய்வோம்!" என்றான்.

"நானும் அதற்காகவேதான் எல்லாத் தெய்வங்களையும் வேண்டிக் கொண்டிருக்கிறேன், சூரியா! உலகத்திலேயே அவர்கள் இரண்டு பேரிடத்திலும் இந்தக் குழந்தையிடத்திலும் தான் எனக்கு ஆசை. நீ சீதாவிடம் பேசுகிறபடி பேசு. அதோடு சீதாவின் ஜாதகம் எங்கேயாவது கிடைக்குமா என்று பார்த்து வாங்கி அனுப்பு. அவளுடைய ஜாதகத்தில் ஏதாவது தோஷம் இருந்தால் அதற்கு வேண்டிய சாந்தியைப் பண்ணச் சொல்லலாம்!" என்றாள் காமாட்சி அம்மாள்.

## ஏழாம் அத்தியாயம்

# வெள்ளி வீதியில்

சரித்திரத்தில் புகழ்பெற்ற டில்லி மா நகருக்கு மறுபடியும் நேயர்களை அழைத்துச் செல்ல வேண்டியதாகிறது. 1943-ம் வருஷத்தின் பிற்பகுதியில் டில்லி நகரம் அதி விரைவாகப் பணப் பெருக்கமும் ஜனப் பெருக்கமும் அடைந்துகொண்டு வந்தது. யுத்தம் இந்தியாவின் எல்லையை நெருங்கி வந்து கொண்டிருந்ததை முன்னிட்டு இந்தியாவின் தலைநகரில் யுத்த முஸ்தீப்புகள் அதி தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. பிரிட்டிஷ் சோல்ஜர்களும் அமெரிக்க சோல்ஜர்களும் கூர்க்க சிப்பாய்களும் சீக்கியத் துருப்புகளும் தென்னிந்திய வீரர்களும் எங்கே பார்த்தாலும் காணப்பட்டார்கள். டாக்ஸி கார்களுக்கும், டோங்கா வண்டிகளுக்கும், ரிக்ஷாக்களுக்கும்கூட என்றுமில்லாத கிராக்கி ஏற்பட்டிருந்தது. இத்தகைய நிலைமையில் டில்லி ரயில்வே ஸ்டேஷனில் வந்திறங்கிய சூரியாவுக்கு வண்டி எங்கே கிடைக்கப்போகிறது?

ஸ்டேஷன் வாசலில் வந்து நின்ற சூரியா ஐந்து நிமிஷம் தயங்கி நின்று யோசனையில் ஆழ்ந்திருந்தான். புது டில்லிப் பக்கம் நடையைக் கட்டுவதா அல்லது முதலில் பழைய டில்லிக்குப் போவதா என்னும் பிரச்னைதான் அவனை அத்தகைய சிந்தனைக்கு உள்ளாக்கியிருந்தது. கடைசியில் பழைய டில்லிக்கே சீட்டு விழுந்ததாகத் தோன்றியது. விடுவிடு என்று பழைய டில்லியை நோக்கி நடந்தான்.

பழைய டில்லியில் 'சாந்த்னி சவுக்' என்னும் வீதிக்கு வந்ததும் சூரியாவின் நடை மெதுவாயிற்று. அவனுடைய உள்ளமோ சில நூறு வருஷம் பின்னால் சென்று அந்தப் பிரசித்தி பெற்ற 'வெள்ளி வீதி'யில் அவ்வப்போது நடந்த சரித்திர நிகழ்ச்சிகளைப் பற்றிச் சிந்திக்கலாயிற்று.

அந்தச் 'சாந்த்னி சவுக்' ஒரு காலத்தில் உலகத்திலேயே மிகப் பணக்கார வீதி என்று பெயர் பெற்றிருந்தது. 'சாந்த்னி' என்பதன் பொருள் 'வெள்ளி'. ஆயினும், அந்த வீதியில் வெள்ளிக் கடைகள் மட்டும் இருக்கவில்லை. தங்க நகைக் கடைகளும் நவரத்தின நகைக் கடைகளும் உலகமெங்குமிருந்து வந்த அபூர்வமான பொருள்களின் கடைகளும் இருந்தன. மன்னாதி மன்னர்களெல்லாம் அணிய விரும்பக்கூடிய பட்டுப் பட்டாடைகளும் ரத்தின கம்பளங்களும் பல கடைகளில் விற்கப்பட்டன. அந்த வீதியில் வசித்தவர்கள், கடை வைத்திருந்தவர்கள் அனைவரும் செல்வத்திற் சிறந்த சீமான்கள். இப்படி

யாகச் செல்வம் குவிந்திருந்த இடத்துக்கு ஆபத்துக்கள் வருவது இயற்கையல்லவா? ஆபத்து ஒரு தடவை வரவில்லை; பல தடவைகள் வந்தன.

ஐந்நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னால் மங்கோலியா தேசத்திலிருந்து தைமூர் என்னும் அசுரன் ஒரு பெரிய ராட்சதப் படையுடனே வந்தான். அச்சமயம் டில்லியில் முகம்மது துக்ளக் என்னும் பாதுஷா அரசாண்டான். தைமூரும் முகம்மது துக்ளக்கும் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவர்கள்தான். இது காரணமாகத் தைமூர் கருணை காட்டினானா? இல்லை. முகம்மது துக்ளக்கின் சைன்யத்தை டில்லிக் கோட்டை வாசலிலே தோற்கடித்து நகரத்துக்குள் புகுந்தான். ஆயிரமாயிரம் பிரஜைகளைக் கொன்று குவித்தான்; வெள்ளி வீதியின் செல்வத்தைக் கொள்ளையடித்தான்; இரத்தின கம்பளங்களை விரித்து இராஜ குமாரர்களும் இராஜ குமாரிகளும் நடமாடிய இடமெல்லாம் இரத்த ஆறு ஓடும்படி செய்தான்.

தைமூர் டில்லியில் இரண்டு வாரம் தங்கியிருந்து ஹதாஹதம் செய்துவிட்டுப் புறப்பட்டுச் சென்றான். அவன் போன பிறகு டில்லி நகரம் ஒரு பயங்கர சொப்பனத்திலிருந்து விழித்து எழுந்ததுபோல் எழுந்தது. கண்டது கனவல்ல வென்றும் உண்மையான பயங்கரம் என்றும் உணர்ந்தது. ஆயினும் அந்த அதிசயமான ஜீவ சக்தியுள்ள நகரம் மறுபடியும் அதி சீக்கிரத்தில் சீரும் செல்வமும் பெற்றுக் குபேரபுரியாயிற்று. இரத்த ஆறு ஓடிய 'வெள்ளி வீதி'யில் மறுபடியும் தங்க மோகராக்கள் குலுங்கும் சத்தமும் இராஜ குமாரிகளின் பாதச் சிலம்பின் சத்தமும் கேட்கத் தொடங்கியது.

டில்லியின் சரித்திரத்தில் மூந்நூற்று நாற்பது வருஷங்கள் சென்றன. பாபர் முதல் அவுரங்கஜீப் வரையில் மொகலாய சக்ரவர்த்திகள் வீற்றிருந்து அரசு செலுத்திய இடத்தில் இப்போது முகம்மது ஷா என்பவன் அரசுபுரிந்தான். அப்போது பாரசிகத்திலிருந்து நாதிர்ஷா என்னும் கொடிய அரக்கன் பெரும் சைன்யத்துடன் படையெடுத்து வந்தான். மறுபடியும் 'சாந்தினி சவுக்'குக்கு ஆபத்து வந்தது. 'சாந்தினி சவுக்'க்கு அருகில் இருந்த மசூதியின் கோபுரத்தில் உட்கார்ந்து கொண்டு நாதிர்ஷா தன் மூர்க்கப் படைகள் டில்லி வாசிகளைப் படுகொலை செய்யும் காட்சியைப் பார்த்துக் களித்தான். கொலைக்குப் பிறகு கொள்ளையும் அடித்தான். மீண்டும் அந்த வீதியில் இரத்த ஆறு ஓடியது; இரத்த ஏரி தேங்கி நின்றது. இந்தப் பயங்கர சம்பவத்தின் ஞாபகார்த்தமாக அந்த வீதியின் ஒரு முனையிலுள்ள வாசலுக்குக் 'கூனி தர்வாஜா' (இரத்த வாசல்) என்னும் பெயர் இன்று வரையில் வழங்கி வருகிறது.

நாதிர் ஷா வந்து போன இருபது வருஷத்துக்கெல்லாம் அவனுடைய ஸ்தானத்துக்கு வந்திருந்த ஆமத்ஷா அப்தாலி என்பவன் டில்லி மீது படை எடுத்து வந்தான். நாதிர் ஷா பாக்கி வைத்து விட்டுப் போன செல்வத்தையெல்லாம் ஆமத்ஷா கொள்ளை யடித்தான்; படு கொலையும் நடத்தினான். இந்தத் தடவையும் அந்த டில்லி நகரில் பெருங்கொடுமைக்கு உள்ளான பகுதி 'வெள்ளி வீதி'தான்.

ஆமத்ஷாவுக்குப் பிறகு ஸிந்தியாக்களும், ஹோல்கார்களும், ரோஹில்லர்களும் படையெடுத்து வந்து தங்கள் தங்கள் பங்குக்குக் கொள்ளை யடிக்கும் கைங்கரியத்தைச் செய்தனர்.

கடைசி கடைசியாகப் பிரிட்டிஷாருடைய பெருங் கருணைக்கும் டில்லிமா நகரம் பாத்திரமாயிற்று. 1857-ம் ஆண்டில் 'சிப்பாய்க் கலகம்' என்று அழைக்கப்பட்ட புரட்சி தோல்வியுற்றதும் பிரிட்டிஷ் துருப்புகள் டில்லியைப் பறி வாங்கின. ஒரு வாரம் நகரமெல்லாம் கொள்ளையும் கொலையுமாக இருந்தது. ஒரு வாரத்துக்குப் பிறகு பிரிட்டிஷ் அதிகாரிகள் தங்கள் சைன்யத்தைக் கட்டுக்குள் கொண்டு வந்தார்கள். வரை முறை யில்லாமல் கொலை செய்ததை நிறுத்தி, இனி முறைப்படி விசாரித்துக் கலகக்காரர்களைத் தண்டிக்கத் தொடங்கினார்கள்! நாதிர்ஷாவும் ஆமத்ஷாவும் படுகொலை நடத்திய அதே வெள்ளி வீதியில் பிரிட்டிஷ் இராணுவக் கோர்ட்டின்

தூக்கு மரம் நாட்டப்பட்டது. சுமார் ஆயிரம் பேர் தூக்கிலிடப்பட்டார்கள்!

அத்தகைய பயங்கர சம்பவங்களுக்கு இடமான சரித்திரப் பிரசித்தி பெற்ற 'சாந்னி சவுக்'கென்னும் வெள்ளி வீதியில் சூரியா நடந்து சென்று கொண்டிருந்தான். நடந்து கொண்டிருக்கையில் அவனுடைய மனக் கண்ணின் முன்னால் மேற்கூறிய சரித்திர நிகழ்ச்சிகள் எல்லாம் வரிசைக் கிரமமாக வந்து கொண்டிருந்தன. அந்த நிகழ்ச்சிகளைக் கற்பனை செய்து பார்த்தபோது அவனுடைய உடம்பு சிலிர்த்தது. ஒவ்வொரு சமயம் தலை சுற்றுவது போலிருந்தது.

இன்னொரு பக்கத்தில் அளவில்லாத அதிசயம் அவனைப் பற்றிக் கொண்டிருந்தது. இவ்வளவு கொடூரங்களுக்கும் பயங்கரங்களுக்கும் உள்ளான இந்த வெள்ளி வீதி இன்றைய தினம் எவ்வளவு கலகலப்பாயிருக்கிறது! எத்தனை கடைகள்? அவற்றில் எவ்வளவு விலை உயர்ந்த பொருள்கள்! வீதியில் நடப்பதற்கு இடமின்றி நெருங்கியிருக்கும் ஜனக் கூட்டத்தை என்னவென்று சொல்வது? எத்தனை விதவிதமான ஜனங்கள்? எத்தனை நிறத்தினர்? எத்தனை மதத்தினர்? ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள், இங்கிலிஷ் டாமிகள், அமெரிக்க நிபுணர்கள், வங்காளிகள், பஞ்சாபியர், தென்னிந்தியர், — அம்மம்மா! இது என்ன கூட்டம்? இது என்ன பணப் பெருக்கம்? கடைகளிலே பணம் எப்படிப் புரளுகிறது? அமெரிக்கர்கள் எப்படிப் பணத்தை வாரி இறைக்கிறார்கள்?—'சரித்திரம் திரும்பி வரும்' என்று சொல்கிறார்களே? ஒருவேளை மறுபடியும் இந்த வெள்ளி வீதிக்குத் துர்த்தசை ஏற்படுமா? கொள்ளையும் கொலையும் நடக்குமா? இரத்த ஆறு ஓடுமா? ஜெர்மானியரோ, ஜப்பானியரோ, ருஷியரோ, இங்கே படையெடுத்து வருவார்களா? மறுபடியும் இந்த வெள்ளி வீதி ரணகளம் ஆகுமா?......

இப்படியெல்லாம் சூரியா சிந்தித்துக் கொண்டே நடந்தான். மனம் சிந்தனை செய்து கொண்டிருக்கையில் கண்கள் தங்கள் வேலையைச் செய்து கொண்டிருந்தன. யாரையோ, எதையோ, அவனுடைய கண்கள் சுற்றிச் சுழன்று தேடிக் கொண்டிருந்தன. ஆயினும்

## காங்கிரஸ் மலர்கள்

ஜெய்ப்பூர் காங்கிரஸை முன்னிட்டு வெளியான இரு அருமையான காங்கிரஸ் மலர்கள் நம் பார்வைக்கு வந்தன. ஒன்று ஸ்ரீ சு. ரா. கோவிந்தனை ஆசிரியராகக் கொண்ட 'பிரீ இந்தியா' பத்திரிகையின் மலர். இந்தியாவிற்குள்ளே திறமையாக நடத்தப்படும் ஆங்கில வாரப் பத்திரிகைகளுக்குள்ளே 'பிரீ இந்தியா' ஒன்று. இதன் சாதாரண இதழ் எவ்வளவு உயர்தரமாயிருக்கிறதோ, அதற்கேற்பக் காங்கிரஸ் மலரும் உயர்தரமாயமைந்திருக்கிறது. காங்கிரஸ் மகாசபையின் ஆரம்பத்திலிருந்து இன்று வரை காங்கிரஸ் அக்கிராசனர்களின் படங்கள் வெளியிட்டிருப்பது ஒரு விசேஷ அம்சம். மூவர்ண அட்டைப்படம் கண்ணைப் பறிக்கிறது. பல பிரமுகர்கள் கட்டுரை எழுதியிருக்கிறார்கள். இன்னொரு உயர்தரக் காங்கிரஸ் மலர் "பாரிஜாதம்" பத்திரிகை வெளியிட்டிருப்பது. இதிலும் அட்டைப்படம், அழகாயமைந்திருக்கிறது. உள்ளே காங்கிரஸ் தலைவர்களின் படங்கள் விளங்குகின்றன. இதில் வெளியாகியிருக்கும் காங்கிரஸ் மகாசபையின் சரித்திரம் வெகு ரஸமானது: இந்தத் தலைமுறையைச் சேர்ந்த இளைஞர்களுக்கு மிகவும் உபயோகமானது.

"பாரிஜாதம்" முன்னெல்லாம் சிறந்த இலக்கியக் கதைப் பத்திரிகையாக விளங்கி வந்தது. இப்போது அரசியல் உருவமும் பெற்றிருக்கிறது என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறோம். பழைய ஆசிரியர் ஸ்ரீ வி. எஸ். ராமகிருஷ்ணன் - 'வஸந்த'னுடன், - ஸோஷலிஸ்ட் எழுத்தாளர் ஸ்ரீ கே. அருணாசலமும் ஆசிரியராகச் சேர்ந்திருக்கிறார். அடுத்த மாதத்திலிருந்து மாதம் இரண்டு இதழாக வெளிவரும். விலை காலணாத்தான் என்று அறிவிக்கப்படுகிறது. புதிய "பாரிஜாதம்" சகல அம்சங்களிலும் சிறந்து விளங்கிப் பத்திரிகை உலகில் வெற்றிக் கொடி நாட்டும் என்று எதிர்பார்க்கிறோம்.

பலன் கிட்டவில்லையென்று அவனுடைய முகத்தில் காணப்பட்ட ஏமாற்றமான தோற்றம் தெரிவித்தது.

சூரியா வெள்ளிவீதியைக் கடந்து இன்னும் அப்பால் சென்று கடைசியாக ஜும்மா மசூதியை அடைந்தான். ஷாஜஹான் சக்கரவர்த்தி கட்டியதும் இந்தியாவிலேயே பெரியதுமான அந்தக் கம்பீர மசூதியைக் கீழிருந்து அண்ணாந்து பார்த்தான். பிறகு அதன் படிகளில் ஏறினான். முக்கால் வாசிப் படிகள் ஏறியதும் நின்று சுற்று முற்றும் உள்ள வீதிகளைப் பார்த்தான். பிறகு சற்றுத் தூரத்திலிருந்த கோட்டையைப் பார்த்தான். கோட்டைக்கும் மசூதிக்கும் நடுவிலிருந்த பகுதி ஒரு காலத்தில் ஜன நெருக்கம் வாய்ந்த பகுதியாயிருந்ததென்றும், அங்கிருந்த ஆயிரக்கணக்கான வீடுகளையும் மசூதிகளையும் பிரிட்டிஷ் துருப்புக்கள் பீரங்கி வைத்து இடித்து நாசமாக்கித் திறந்த வெளியாகச் செய்து விட்டார்கள் என்றும் நினைவு கூர்ந்தான். அவன் நின்று கொண்டிருந்த புகழ் பெற்ற ஜும்மா மசூதி கூடப் பிரிட்டிஷ் துருப்புகளின் ஆதிக்கத்தில் கொஞ்சகாலம் இருந்தது. தைமூரும் நாதிர்ஷாவும் அமத்ஷாவும் காட்டுமிராண்டிகள் என்று சொல்லத்தக்க பழைய காலத்து ராட்சதர்கள். ஆனால் படித்தவர்கள் என்றும் நாகரிகமடைந்தவர்கள் என்றும் சொல்லிக் கொள்ளும் பிரிட்டிஷார் இந்த டில்லிமா நகரில் செய்த அக்கிரமங்களைப் பற்றி என்னவென்று சொல்வது? அவற்றை எண்ணிப் பார்த்தபோது சூரியாவின் இரத்தம் கொதித்தது.

ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தங்களுடைய அற்ப மாத்சரியங்களை ஒழித்து பிரிட்டிஷாரை இந்தியாவை விட்டு ஓட்டும் காலம் வருமா? பழைய டில்லியிலும் புது டில்லியிலும் யூனியன் ஜாக் கொடி இறங்கி இந்திய சுதந்திரக் கொடி பறக்கும் நாள் வருமா? அந்த நாளைப் பார்க்கத் தனக்குக் கொடுத்து வைத்திருக்குமா?...

இவ்விதம் சூரியா எண்ணமிட்டுக் கொண்டிருந்தபோது யாரோ தன் இடது கையை இரும்புப் பிடியாகப் பிடித்ததை உணர்ந்து சூரியா திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

---

## டன்லப் தங்க விழா

★ ★ ★

1898-ம் வருஷத்தில் இந்தியாவில் மோட்டார்களே இல்லாத சமயம் தோன்றிய இந்த ஸ்தாபனம் 50 வருஷங்களாக சேவைபுரிந்து இந்தியாவில் டயர் தொழிலைச் செழிக்கச் செய்துள்ளது. முதல் மஹாயுத்த முடிவுக்குப் பின் இந்தியாவின் தொழில் வளம் பெருக ஆரம்பித்ததன் காரணமாகப் போக்குவரத்து வசதியும் அதிகரித்தது. இதை யொட்டி டயர்களை இந்நாட்டிலேயே ஏராளமாக உற்பத்தி செய்ய டன்லப் ஸ்தாபனத்தார் 1936-ம் வருஷத்தில் கல்கத்தாவுக்கு 30 மைல் தூரத்திலுள்ள ஸாஹா கஞ்ச் என்னுமிடத்தில் முதன் முதலாக டயர் தொழிற்சாலை ஒன்றை ஸ்தாபித்தனர். இதைத் தொடர்ந்தே இரண்டாவது உலக யுத்தமும் ஆரம்பமாயிற்று. யுத்தகாலத்தில் தயாரிப்பு அளவு இரு மடங்குக்கு உயர்ந்தது. யுத்த முடிவுக்குப் பின்னரே பொதுஜனத் தேவைகளைச் சரிவர கவனிக்க சாத்தியமாயிற்று. இன்று டன்லப் தொழிற்சாலையில் சுமார் 4000 தொழிலாளர்கள் போஷிக்கப்படுகின்றனர். யுத்தத்தினால் தடைப்பட்டுப் போயிருந்த தொழிலாளர்களின் சுபிட்ச திட்டங்கள் ஒவ்வொன்றாக நிறைவேற்றப்பட்டு வருகின்றன. தொழிற்சாலையை அடுத்தாற்போல் ஏராளமான வீடுகள் கட்டி, சுமார் 2000 தொழிலாளிகளுக்கு குடியிருப்பு வசதி செய்திருக்கின்றனர். இன்னும் வேலை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. மற்றும் தொழிலாளிகளின் நன்மையை உத்தேசித்து வைத்திய உதவி, பொழுது போக்கு வசதி, கடைகள் முதலிய வசதிகளும் ஏற்படுத்தியுள்ளனர்.

இந்தத் தொழிலுக்கு வேண்டிய மூலப் பொருள் முழுவதும் இந்நாட்டிலிருந்தே உபயோகித்துக் கொள்வது குறிப்பிடத்தக்கது. இதனால் ஆயிரக் கணக்கானவர்களுக்கு பிழைப்பு ஏற்படும். தயாரிப்பு நிபுணர்கள் பதவிகளை இந்திய மயமாக்கும் எண்ணத்துடன் தகுதியுள்ளவர்களை இங்கிலாந்திற்கு அனுப்பிப் பயிற்சியளிக்கவும் ஏற்பாடு செய்துள்ளார்கள். தேசத்தின் மிக முக்கியமான தொழிலை நடத்திவரும் இந்த ஸ்தாபனம் மேலும் மேலும் அபிவிருத்தியடையுமென்று நம்புகிறோம்.

டன்லப்பின் தங்கவிழாக் கொண்டாட்டம் நாடெங்கும் வெகு விமரிசையாக நவம்பர் மாதம் 23-ம் தேதி கொண்டாடப்பட்டது.

நன்றாகத் தெரியுமே? அவனைக் கேட்டுப் பார்! நான் காசிக்குப் போயிருக்கபோது சீதாவுக்குச் சுரம் வந்து பிழைப்பது துர்லபம் என்று ஆகிவிட்டது. அந்தச் சமயத்தில் தாரிணி வந்து இரவு பகலாக இவளுக்குச் சிசுருஷை செய்து காப்பாற்றினாள். உடம்பு சௌகரியமானதும் சீதா அவளைத் திட்டிய திட்டுக்கு அளவேயில்லை. நாக்கில் நரம்பில்லாமல் அவளையும் ராகவனையும் பற்றிப் பேசினாள். தாரிணி அவ்வளவையும் பொறுத்துக் கொண்டு சமாதானமாக நல்ல வார்த்தை சொல்லி விட்டுப் போய்ச் சேர்ந்தாள். ஒரு சமயம் அந்தப் பெண்ணின் வயிற்றெரிச்சலை நான் கொட்டிக் கொண்டேன். இந்த வீட்டில் பூஜை அறையில் அவள் என் காலில் விழுந்து நமஸ்காரம் செய்து ராகவனைக் கலியாணம் செய்து கொள்ளச் சம்மதம் கொடுக்கும்படி கேட்டாள். அவள் என்ன சாதியோ, என்னமோ என்ற காரணத்தினால் கண்டிப்பாக முடியாது என்று சொல்லி விட்டேன். இப்போது நினைத்துப் பார்த்தால் அது பெரிய தப்பு என்று தோன்றுகிறது. தாரிணியைக் கலியாணம் செய்து கொண்டிருந்தால் என் பிள்ளை எவ்வளவோ சந்தோஷமாக இருந்திருப்பான். அதற்கு நான் தடையாக நின்றேன். அந்தப் பெண்ணின் வயிற்றெரிச்சல்தான் இப்படி என்னையும் என் பிள்ளையையும் படுத்தி வைக்கிறது என்று தோன்றுகிறது."

இதைக் கேட்ட சூரியா சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். தாரிணியின் பேரில் அவனுக்குக் கோபம் வந்தது. பழைய கதை இப்படியெல்லாம் இருக்கும்போது ராகவன்—சீதாவின் வாழ்க்கையில் தாரிணி தலையிட்டிருக்கவே கூடாது என்று எண்ணினான். அவளுடைய மனதிலும் ராகவனுடைய மனதிலும் பழைய சிநேகத்தின் பாசம் இல்லையென்பது என்ன நிச்சயம்? ஆகையால் அவர்கள் விஷயத்தில் சீதா அசூயைப் படுவதிலே தான் என்ன தவறு?

இவ்விதம் எண்ணிக் கொண்டே போன சூரியா சட்டென்று அந்த எண்ணப் போக்குக்கு முட்டுக்கட்டை போட்டு நிறுத்தினான்.

"மாமி! நடந்து போன காரியத்தைப் பற்றி அது வேறு விதமாய் நடந்திருக்கக் கூடாதா என்று யோசிப்பதில் என்ன பிரயோஜனம்? பிரம்மா தலையில் எழுதின எழுத்தை யார் மாற்றி எழுத முடியும்? உங்கள் பிள்ளை சந்தோஷமாயிருப்பதற்கு என்ன வழி என்றுதான் இனிமேல் நாம் பார்க்க வேண்டும். சீதாவின் வாயாடித்தனத்தைப் பற்றி நீங்கள் சொன்னதை நான் மனதில் வைத்துக் கொண்டிருக்கிறேன். அவளுக்கு என்னால் முடிந்த வரையில் புத்திமதி சொல்லிப் பார்க்கிறேன். நீங்களும் நல்ல முறையில் கொஞ்சம் சொல்லிப் பாருங்கள். டில்லிக்கு எப்போது வரப்போகிறீர்கள்?" என்று கேட்டான்.

"ராகவனிடமிருந்து எப்போது கடிதம் வரும் என்று எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் டில்லிக்குப் போவதென்றால் ஒரு விதத்தில் பயமாகவும் இருக்கிறது. புருஷன் மனைவி சண்டையில் இந்தக் குழந்தைக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடப் போகிறதே என்று பயப்படுகிறேன். உன்னிடம் சொன்னால் என்ன? உனக்குத் தெரிந்திருக்க வேண்டியதுதான். ஒரு தடவை சீதா இந்தப் பச்சைக் குழந்தையிடம் ஏதோ சொல்லிக் கொடுத்திருக்கிறாள். இந்தக் குழந்தை போய் அப்பாவிடம், 'அம்மாவை வையாதே, அடிக்காதே!' என்று சொல்லியிருக்கிறாள். அவனும் முரட்டுத்தனமாகத் தன் கோபத்தை இந்தக் குழந்தையிடம் காட்டி இரண்டு அடி அடித்து விட்டான். குழந்தைக்குச் சுரம் வந்து விட்டது..."

"ஐயோ!" என்றான் சூரியா.

"எப்போதோ நடந்ததைக் கேட்டு நீ 'ஐயோ!' என்று பரிதாபப் படுகிறாயல்லவா? ஆனால் சீதா என்ன செய்தாள் தெரியுமா? குழந்தைக்குச் சுரம் என்பதை மூன்று நாள் வரையில் ஒருவரிடமும் சொல்லவில்லை. அப்புறம் ராகவனுக்கு எப்படியோ தெரிந்து டாக்டரை அழைத்துக் கொண்டு வந்தான். குழந்தை பிழைப்பது புனர் ஜன்மம் ஆகிவிட்டது. உன் அத்தங்காளின் ராட்சதத் தனத்தைப் பார்த்தாயல்லவா?" என்றாள்.

★ காட்டு வைத்தியர் ஒருவர் 'பண வீக்கம்' என்னும் புதிய வியாதிக்கு என்ன வைத்தியம் செய்வதென்று தெரியாமல் திணறுகிறார்!



# வாயுவா, வாதமா?

காட்டூர் கண்ணன்

★

பணம் வீங்குதாம், ஐயா! பணம் வீங்குதாம்! — இதைப்
பார்த்துக்குண மாக்கும்வழி ஏதும்புரியல்லை!

வாயுவினால் வந்த ஊதல் இதோ? — கெட்ட
வாதத்தினால் வந்த வீக்கம் இதோ?
நோய்நொடி பட்டு நொந்துகிடந்து — பின்
நூதனமாய் வரும் ஊளையிதோ?

ஆளிவிதையாம் வாதமடக்கி
ஆடுதொடா இலை காட்டாமணி
பாவிமனிசர்க்கு ஏதும் வந்தால் — நான்
பண்ணும் வைத்தியம் நூறுஉண்டு!

ஒத்தடம் போட்டு உடம்புமுழுவதும்
உருவி விடலாம் எண்ணெயிட்டு
பத்திட்டுப் பத்தியம் போட்டிடலாம் — அன்றிப்
பட்டினி போட்டாலும் தீர்த்திடலாம்!

ஆயிரம் ஆயிரம் பேருக்கு வைத்தியம்
ஆயுள் முடியநான் பார்த்திருக்கேன்
நோயும் நொடியும் வீக்கமும் ரூபாய்
நோட்டுக்கு வந்ததாய்க் கேட்டதில்லை!

பணம் வீங்குதாம், ஐயா! — பணம் வீங்குதாம்!



# மந்திரிசபையில் புயல்

ராஜனி

கொழும்பு, டிசம்பர் 13.

தமிழ்க் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ஜி. ஜி. பொன்னம்பலம் இந்தியர் பிரஜா உரிமை மசோதா சம்பந்தமாகக் கேவலமான முறையில் நடந்துகொண்டது தமிழர்களிடையே பெரிய கொந்தளிப்பை உண்டு பண்ணியிருக்கிறது. பழைய கொள்கைகளை மூட்டை கட்டி வைத்துவிட்டு மந்திரி பதவிக்கு ஆசைப்பட்டு ஸ்ரீ சேனநாயகா கோஷ்டியில் அவர் சேர்ந்தவுடனேயே இந்தியர்களுக்கு அவரிடமிருந்த நம்பிக்கை போய்விட்டது. ஆயினும் இந்தியர்களைக் கடுமையாகப் பாதிக்கும் பிரச்னைகளில் அவர் நடுநிலைமையாவது வகிப்பாரென்று பொதுவாக எதிர்பார்க்கப்பட்டது. தமிழ்க் காங்கிரஸ் பொதுக் காரியதரிசியான செனட்டர் டாக்டர் இ. எம். வி. நாகநாதன் இடித்துக் காட்டி யிருப்பதைப் போல் தமிழ் வகுப்பாரையும் தமிழ்க் கலாசாரத்தையும் தமிழ் மொழியையும் சாசுவதமாகச் சிங்களவருக்கு அடிமைப்படுத்தும் கைங்கரியத்தில் ஸ்ரீ பொன்னம்பலம் இறங்கிவிட்டார் போலும்!

## உறுதிமொழி காற்றில் பறந்தது!

ஸ்ரீ பொன்னம்பலத்தின் தமிழ்க் காங்கிரஸ் தோன்றுவதற்குப் பக்கபலமாயிருந்தவர்கள் இந்தியர்கள். தமிழர்களிடையில் இந்தியத் தமிழர் என்றும் யாழ்ப்பாணத் தமிழர் என்றும் வேற்றுமை யில்லாமல் தமிழ் மொழி பேசுவோர் அனைவரும் ஒரு ஐக்கிய முன்னணியில் திரண்டு நின்று சிங்களவர்களுடன் உரிமைப் போராட்டம் நடத்த வேண்டுமென்று ஸ்ரீ பொன்னம்பலம் சொல்லி வந்தார். தமிழ்க் காங்கிரஸின் அடிப்படை இலட்சியமும் அதுவாகத் தானிருந்தது. இலங்கையில் ஐந்து வருடகாலம் வசித்த இந்தியர்களுக்கெல்லாம் பூரண பிரஜா உரிமை யளிக்க வேண்டுமென்று தமிழ்க் காங்கிரஸ் வருடாந்திர மகாநாடுகளிலும் பழைய பார்லிமெண்டிலும் மணிக் கணக்கிலே அவர் வாதாடி யிருக்கிறார். தவிர, இலங்கை இந்தியக் காங்கிரஸுக்கு எழுத்துமூலம் எழுதிக் கொடுத்த ஒரு பிரமாணப் பத்திரத்தில், "ஐந்து வருஷம் இலங்கையில் வசித்த இந்தியர்களுக்கெல்லாம் பூரண பிரஜா உரிமை யளிக்க வேண்டுமென்று எப்பொழுதும் நான் வற்புறுத்துவேன். இந்தியத் தொழிலாளரின் லௌகீக, சமுதாய க்ஷேம லாபங்களை வளர்க்கவும் அவர்களுக்கு எல்லாவிதமான நலன்களும் கிடைக்கவும் அவர்களுக்கிருந்துவரும் இடையூறுகளை நீக்கவும் பாடுபடுவதாக நான் சத்தியம் செய்கிறேன்" என்று உறுதிமொழியும் அளித்திருக்கிறார்.

இப்படி உறுதி கூறிய மனிதர் கொடிய பொழுதில் வாக்குறுதிகளைக் காற்றில் பறக்க விட்டுவிட்டுச் சிங்களவரோடு சிங்களவராக ஐக்கியமாகி இந்தியர் பிரஜா உரிமை மசோதாவை ஆதரித்து வோட்டளித்தது எவ்வளவு கேவலம்?

## வெளியேறினர்!

பார்லிமெண்டில் ஸ்ரீ ஜி. ஜி.யைத் தவிர மற்றும் இரண்டு தமிழ் மந்திரிகளும் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவரான ஸ்ரீ ஸி. சிற்றம்பலம் மனச் சாட்சிக்கு விரோதமாக நடக்க விரும்பாமல்தானோ என்னவோ, பார்லிமெண்டுக் கூட்டத்துக்கே வரவில்லை. இன்னொரு தமிழ் மந்திரியான ஸ்ரீ வி. சுந்தரலிங்கம் இந்தியர் பிரஜா உரிமை மசோதா முழுவதையும் கேட்டுக்கொண்டிருந்துவிட்டுத் தமது ஆட்சேபணையைத் தெரிவிக்கும் தோரணையில் வோட்டெடுக்கும்பொழுது 'விர்' 'ரென்று எழுந்துபோய் விட்டார். வோட்டுப் போடும்படி கட்டாயப் படுத்த மந்திரி ஸ்ரீ குணசிங்கா உதவி மந்திரியொருவரை அவசரம் அவசரமாக அனுப்பி அழைத்தும்கூட ஸ்ரீ வி. சுந்தரலிங்கம் சபைக்கு வர மறுத்துவிட்டார்.

ஸ்ரீ சுந்தரலிங்கம் எந்தக் காலத்திலுமே இந்தியர்களிடத்தில் அதிக அனுதாபம் காட்டியது கிடையாது. அப்படிப்பட்டவருக்கே இந்தியர் பிரஜா உரிமை மசோதாவிலுள்ள அக்கிரமமான ஷரத்துக்களைப் பார்க்கப் பொறுக்கவில்லை.

இதன் பலன் என்ன? பிரதமர் சேனநாயகாவும் அவரது சக மந்திரிகளும் சிங்களப் பார்லிமெண்டு அங்கத்தினர்களும் அவரிடம் பிரமாத ஆத்திரம் கொண்டிருக்கிறார்கள். சிங்களப் பத்திரிகைகள் அவருடைய புகைப் படத்தைப் பிரசுரித்து, "முதல் நம்பர் தேசத் துரோகி" என்று எழுதியிருக்கின்றன. "உங்கள் நடத்தைக்கு உடனே காரணம் சொல்லுங்கள்!" என்று ஸ்ரீ சேனநாயகாவும் அரசாங்கப் பிரதம கொறடா ஸ்ரீ குணசிங்காவும் ஸ்ரீ சுந்தரலிங்கத்துக்கு எழுதியிருக்கிறார்கள்.

பாரிஸ்டர் எஸ். ஜே. வி. செல்வநாயகம், ஸ்ரீ எஸ். சிவபாலன், ஸ்ரீ வி. வன்னியசிங்கம் முதலான தமிழ்க் காங்கிரஸ் பிரதிநிதிகள் தங்கள் ஸ்தாபன இலட்சியங்களைத் தழுவி இந்தியர் பிரஜா உரிமை மசோதாவை எதிர்த்து வோட்டளித்தார்கள். மசோதாவின் அநியாய ஷரத்துக்களையெல்லாம் ஸ்ரீ செல்வநாயகம் சபையில் அம்பலப்படுத்தி விளாசினார். எதிர்க் கட்சிப் பிரதிநிதிகள் எல்லோருமே மசோதாவைப் பலமாக எதிர்த்தார்கள். இந்தியப் பிரதிநிதிகள் கட்டுப்பாடாகக் கண்டன முழக்கம் செய்தனர். "நல்லெண்ணத்தினால் தீர்க்க வேண்டிய பிரச்னையை மெஜாரிட்டி பலத்தினால் தீர்க்க முயற்சிக்கிறீர்!" என்று இந்தியத் தலைவர் ஸ்ரீ தொண்டமான் எச்சரித்தார்.

இவ்வளவு எதிர்ப்புகளுக்கும் மந்திரி ஸ்ரீ ஏ. இ. குணசிங்கா சுருக்கமாக ஒரே வாக்கியத்தில் பதில் கொடுத்தார். "இலங்கையர்களுக்கு வேலை கிடைக்க இந்தியர்களையெல்லாம் நாடு கடத்த வேண்டுமென்பது தான் எப்பொழுதுமே நான் கைக்கொண்டிருக்கும் கொள்கை!" என்று அவர் நிதானமாக உள்ளதை உள்ளபடி சொன்னார். அவர் இவ்வளவு பச்சையாகக் கூறிய பிறகும் இந்தியர்களுடன் ஆளவனாயி வந்த ஸ்ரீ பொன்னம்பலமும் ஸ்ரீ கே. கனகரத்தினமும், ஸ்ரீ குணசிங்கா கட்சியில் சேர்ந்து வோட்டுக் கொடுத்தது இந்தியரிடம் மட்டுமல்ல, யாழ்ப்பாணத் தமிழரிடையிலும் மிகுந்த மனக்கொதிப்பை உண்டுபண்ணியிருக்கிறது.

[இந்தக் கடிதம் கிடைத்தபின் ஸ்ரீ சுந்தரலிங்கம் ராஜிநாமா செய்துவிட்டார் என்றும் அவரது ஸ்தானத்தில் வேறொருவர் மந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார் என்றும் செய்திகள் வெளியாகியிருக்கின்றன.—ஆசிரியர்.]

# என்ஜினும் காதலும்

டி. ஆர். குருசாமி

அன்று காலை எழுந்திருந்ததும், "அப்பாடா! ஒரு நீண்ட வாரத்துக்குப் பின் ஞாயிற்றுக்கிழமை வந்ததே! முழு நாளும் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம்" என்று எண்ணினேன். அந்த ஓய்வைக் கழிக்க முன்னேற்பாடாக 'லைப்ரரி'யிலிருந்து ஒரு துப்பறியும் நாவல் வேறு வாங்கி வந்திருந்தேன். காலை எட்டு மணி வரை ஜயம் என்னை எழுப்பித் தொந்தரவு கொடுக்காததால், "சரி, இன்று நமக்கு ஓய்வு கிடைக்கும்" என்று நிச்சயமாய் நம்பியபடி படுக்கையை விட்டு எழுந்து பல் துலக்கப் போனேன்.

காப்பி குடித்துவிட்டுக் கையில் முதல் நாள் வாங்கி வந்த நாவலை எடுத்துக் கொண்டு வாசல் அறையை நோக்கி நடந்தேன். சாய்வு நாற்காலியை எடுத்து ஜன்னலருகே போட்டு உட்கார்ந்துகொண்டு நாவலை எடுத்துப் பிரித்ததுதான் தாமதம், ஜயத்தின் குரல் கேட்டது.

"இந்தாருங்கோ! வீட்டிலே மாவு துளிக்கூடக் கிடையாது. இந்த ஒரு படி அரிசியை எடுத்துக் கொண்டு போய் அரைத்துக் கொண்டு வாருங்கோ!" என்ற கட்டளை பிறந்தது.

'நல்ல வேளையாக ஜலப் பிரிவினைக்கும், ஜலப் பரிவர்த்தனைக்கும் குழாயடியை நோக்கி ஏவவில்லையே, மனைக் கடவுள்!' என்று மனதிற்குள் திருப்தி கொண்டு, ஜயம் 'பக்கெட்'டில் போட்டுக் கொடுத்த ஒரு படி அரிசியுடன் மாவு மில்லை நோக்கி நடந்தேன்.

ஞாயிற்றுக் கிழமை யாதலால் ஊரில் ஒரு மில்லும் திறந்திருக்கவில்லை. யாரோ சொன்னார்கள் — 'பஸ் ஸ்டாண்'டுக்குப் பக்கத்திலுள்ள மில் திறந்திருப்பதாக'— உடனே அந்த மில்லை நோக்கி நடையைக் கட்டினேன். 'என்ன பெண்கள்! ஒரு படி அரிசியை மாவு அரைக்க இப்படி மில்லை நம்பிக் கொண்டிருக்கிறார்களே! முன் காலத்திலெல்லாம் மில்களா இருந்தன?' என்று பலவாறு எண்ணமிட்டுக் கொண்டே போய், ஒரு வகையாக மாவு மெஷினை அடைந்துவிட்டேன்.

என்ன ஆச்சரியம்! நான் போகும் பொழுது மாவு மெஷின் நிச்சப்தத்துடனும், நிச்சலனமாகவும் இருந்தது. இரண்டு பர்லாங்கில் வரும்போதே காதைத் துளைத்துவிடும் மில் சத்தமின்றி இருப்பது, எனக்குச் சந்தேகத்தை யளித்தது. மெதுவாக மில்லுக்குள் எட்டிப் பார்த்தேன்.

'வாங்க, ஸார்! 'கரண்ட்' சற்று நின்றிருக்கிறது. கொஞ்ச நேரம் உட்காருங்கள்; மாவை அரைத்துக் கொடுக்கிறேன்" என்றான் மில்காரன்.

நானும், 'சரிதான்; இன்று எப்படியாவது அரிசி மாவாகிவிடும்' என்று நம்பிக்கையில் உட்கார்ந்தேன். எனக்கு வரவேற்பளித்த அந்த ஆள் ஒரு மாதப் பத்திரிகையை வைத்துக் கொண்டிருந்தான். 'கரண்ட் வருகிற வரை அதையாவது படித்துக் கொண்டிருக்கலாம்' என்று அந்தப் பத்திரிகையை வாங்கிப் படிக்க ஆரம்பித்தேன்.

பத்திரிகையும் படித்து முடிக்கப்பட்டது. கரண்ட் வரவில்லை; மெஷின் ஓடவும் இல்லை. "என்ன, அப்பா! கரண்ட் இன்று பூராவும் வராதோ?" என்றேன்.

"இல்லை, ஸார்! இதோ வந்துவிடும். மணி பத்து ஆகிறது. இன்னும் அரை மணி நேரத்தில் வந்துவிடும்."

"அது சரி; இது என்ன, உன் சொந்த மெஷினா?"

"இல்லை, ஸார்! நான் இங்கே சம்பளத்துக்குத்தான் இருக்கிறேன்."

"சம்பளத்துக்கு ஆள் வைத்துக் கட்டுமா, உன்னுடைய முதலாளிக்கு?"

"கட்டாமல் என்ன? தருகிறது நூறு ரூபாய் சம்பளமோ?" என்று எகத்தாளத்துடன் சொன்னான் அவன்.

"உனக்கு எவ்வளவு சம்பளம்?" என்று நான் மீண்டும் தொடர்ந்தேன்.

"முப்பது ரூபாய்க் காசு, ஸார்!"

"பூ! இவ்வளவுதானா! அப்படியானால் நீ ஏன் வேறு வேலை பார்க்கக் கூடாது?"

"பார்க்கலாம்; எனக்கென்னமோ இந்த மெஷினை விட்டுப் போகப் பிடிக்கவில்லை!"

"ஏன், இந்தக் குறைந்த சம்பளத்தில் உனக்கு அவ்வளவு ஆசை? ஒருவேளை மேல் வரும்படி ஏதாவது......?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை; எனக்கு இந்த மெஷினை விட்டுப் போக மனமில்லை; அவ்வளவுதான்!"

"அப்படி என்ன, அப்பா! இந்த மெஷின் மேலே உனக்குக் காதல்?"

"நீங்கள் சொன்னது ரொம்ப சரி; இந்த மெஷினாலேதான் எனக்கு வள்ளியின் மேல் காதல் உண்டாயிற்று!"

"என்ன, வள்ளியா! யார், அவள்?"

"அது ஒரு கதை, ஸார்! சொல்லுவதானால் ரொம்ப நேரமாகும்" என்றான்.

"சும்மா சொல், அப்பா!" என்றேன்.

அவன் ஆரம்பித்தான்:

• • •

இந்த இடத்திலே முப்பது வருஷமாக மெஷின் ஓடுகிறது. கொஞ்ச நாட்கள் வரை இந்த மெஷின் 'ஆயில் என்ஜி'னால்தான் ஓடிக்கொண்டிருந்தது. சுமார் பத்து வருஷங்களாகத்தான் 'எலெக்ட்ரிக் கரண்'டினால் ஓடுகிறது. நான் சொல்லப்போகும் கதை ஆயில் என்ஜினாக இருந்தபோது நடந்தது. அப்போது எனக்குச் சுமார் இருபது வயது இருக்கும். நான்தான் என்ஜினை ஓட்டிக்கொண்டிருந்தேன். எனக்கு இந்தத் தொழிலில் நீண்ட நாள் அனுபவம். நான் ஓட்டினால்தான் என்ஜின் ஓடும்; வேறே யார் வந்து ஓட்டினாலும் ஓடாது. எனக்கும் அந்த என்ஜினுக்கும் அவ்வளவு தூரம் காதல் வளர்ந்திருந்தது.

நான் இரண்டொரு முறை ஊருக்குப் போயிருக்கையில் முதலாளி வேம்பு அய்யர் அதை ஓட்ட முயன்றாராம். அது அவரைப் பாடாய்ப் படுத்திவிட்டதாம். நான் ஊரிலிருந்து வந்ததும், "ரத்தினம்! நீயே உன் என்ஜினைப் பார்த்துக் கொள், அப்பா!" என்று சொல்லிவிட்டார். எனக்குப் பெருமை தாங்கவில்லை; காதலியைப் பார்ப்பதுபோல் என்ஜினைப் பார்த்தேன்.

இப்படி இருக்கையில் எனக்கும் என்ஜினுக்கும் இருந்த காதலுக்குக் குறுக்கே வந்து புகுந்தாள் வள்ளி. அவள் பூனாவிலிருந்து வந்திருந்தாள். எதிர்த்த வீடு அவளுடைய உறவினர் வீடு. ஏதோ காரணமாக வந்தவள், இங்கேயே தங்கிவிட்டாள்.

வள்ளி எதிர்வீட்டுக்கு வந்த முதல் நாளே எனக்குக் காட்சி யளித்தாள். அவ்வளவுதான்; என்னை யறியாமல் என் உள்ளம் அவள்பால் ஓடிவிட்டது. அத்தகைய மோகன உருவம் அவள் பெற்றிருந்தாள். எனவே, என்ஜின் மேல் எனக்கிருந்த காதல் அப்படியே அவள்மீது திரும்பிற்று. வரவர நான் என்ஜினைக் கவனிப்பதில்லை. என் கவனம் பூராவும் எதிர்வீட்டு வாசலிலேயே இருந்தது. 'வள்ளி எப்போது வெளியே வருவாள்? அவள் அழகை எப்போது நம் கண்களால் பருகலாம்?' என்று ஏங்கிக் கிடந்தேன். ஆனால் நெடுநாட்கள் வரை அவள் என்னைக் கவனித்ததாகவே தெரியவில்லை.



ஒரு நாள் அவள் மாவு அரைப்பதற்காக மெஷினுக்கு வந்தாள். அதற்குப் பிறகு அடிக்கடி அவள் என் மெஷினுக்கு வரத் தலைப்பட்டாள். காரணமாகவும் வருவாள், காரணமில்லாமலும் வருவாள். சில்லறை மாற்ற வருவாள் சில சமயம்; சிரித்துப் பேச வருவாள் சில சமயம். நான் என்ஜினை ஓட்டிக் கொண்டிருப்பேன். அவள், "என்ன, ஐயா! உனக்கு என்ஜினைக் கட்டிக்கிட்டு அழுவதுதான் வேலையா? வேறு வேலை இல்லையா?" என்பாள்.

"வேறே யாரைக் கட்டிக்கிட்டு அழுதால் மாசம் முப்பது ரூபாய் வரும்?" என்று சொல்லி நான் அவளைப் பார்ப்பேன். அவள் சிரிப்பாள்.

ஒருநாள் அவள் என்னுடன் பேசிக் கொண்டே அகஸ்மாத்தாக என்ஜினைத் தொட்டு விட்டாள். அவளுடைய கையை என்ஜின் நன்றாகச் சுட்டுவிட்டது. நான் பதறிப் போய் அவள் கையைப் பிடித்துச் சுட்ட இடத்தில் எண்ணெயைத் தடவி, கட்டுக் கட்டினேன்.

இதைக் கண்டு என்ஜினுக்குப் பொறுக்கவில்லைபோலும்!—என்னை அவளிடமிருந்து பிரிக்க வேண்டியோ என்னமோ, அது 'கிரீச்' சென்று சத்தம் செய்ய ஆரம்பித்தது. இந்தச் சத்தத்தைக் கேட்டு வாசலில் நின்று கொண்டிருந்த ஒருவர் உள்ளே ஓடி வந்தார். அவர் வருவதற்கும் நான் வள்ளியின் கையை விடுவதற்கும் சரியாயிருந்தது. நான் ஓடிப் போய்ச் சத்தம் வந்த 'பேரிங்' பக்கம் எண்ணெய் விட்டேன். என்ஜினும் சந்தோஷமடைந்து, 'உஷ், உஷ்' என்று ஓட ஆரம்பித்தது.

உள்ளே வந்தவர் என்னையும் வள்ளியையும் ஒன்றாகப் பார்த்து என்ன எண்ணிக்கொண்டாரோ என்னமோ! வெளியே போய் விட்டார். அப்படிப் போனவர் சும்மா இருக்கவில்லை; எனக்கும் வள்ளிக்கும் சேர்த்து முடி போட்டு வதந்தியைக் கட்டி விட்டார். வாஸ்தவமாகவே எனக்கு வள்ளியிடம் காதல் இருக்கத்தான் இருந்தது. இருந்தாலும், அன்று வரை இருவரும் வெறுமனே பேசுவதோடுதான் நின்றிருந்தோம். அப்படியிருந்தும் ஊர் ஜனங்கள் எங்களை அன்றிலிருந்து சந்தேகக் கண்கொண்டு பார்க்கத் தலைப்பட்டு விட்டனர்.

இந்த விஷயம் வள்ளியின் தகப்பனாருக்குத் தெரிந்துவிட்டது. ஊராரின் வாய்மொழியை நம்பி அவர் வள்ளியைத் துன்புறுத்த ஆரம்பித்துவிட்டார். அவருடைய சுடு சொற்கள் வள்ளியின் உள்ளத்தைத் துணிவு கொள்ளச் செய்து விட்டன. 'செய்யாத செயலுக்குத் தண்டனை அடையவே அடைந்து விட்டோம். இனி உள்ளபடியே ரத்தினத்தைக் கல்யாணம் செய்து கொண்டு விட்டால் என்ன?' என்று அவள் எண்ணிவிட்டாள்.

இப்படி எண்ணியதுதான் தாமதம்; அவள் தன்னுடைய நகைகள், உடைகள் ஆகியவை அடங்கிய ஒரு பெட்டியுடன் மெஷினை நோக்கி வந்து விட்டாள்.

"இந்தா, ஐயா! நானும் நீயும் சிநேகம் என்று ஊர் சிரிக்கிறது. இதுநாள் வரை அப்படி ஒன்றும் இல்லை. இனிமேல் சிநேகமாகிவிடலாம். இதோ, நானும் வந்துவிட்டேன். இனிமேல் நான் உன்னுடைய உடைமை; என்னைக் காப்பாற்றுவது உன் கடமை!" என்றாள்.

நான் என்ன சொல்வது? எனக்கும் அதுவரை கல்யாணமாகாததால் பேசாமல் ஏற்றுக் கொண்டேன்......

• • •

இந்தச் சமயத்தில் 'ஸ்விட்ச்' போட்டிருந்த மின்சார விளக்கு 'திக்' கென்று எரிந்தது. அது 'கரண்ட்' வந்துவிட்டதற்கு அறிகுறியாகையால், மெஷினை ஓட்டி மாவு அரைக்க அவன் எழுந்துவிட்டான்.

"பலே! கதை ரொம்ப ஜோராயிருக்கிறது. வள்ளி இப்பொழுது எப்படி இருக்கிறாள்? குழந்தைகள் ஏதாவது...?" என்று நான் இழுத்தேன். ரத்தினம் சிரித்தான்.

"ஏன் அப்பா, சிரிக்கிறாய்?" என்று கேட்டேன்.

"நான் ஒரு பிரம்மச்சாரி, ஸார்! எனக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லையே!" என்றான்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. "அப்படியானால் நீ சொன்னதெல்லாம் வெறும் கதைதானா?" என்று கேட்டேன்.

"பின் உண்மையென்று நினைத்தீர்கள்? இப்படிக் கதை ஒன்று சொல்லாமற் போனால் நீங்கள் இவ்வளவு நேரம் பொறுமையுடன் காத்திருப்பீர்களா?" என்றான்.

நான் என்னுடைய ஏமாற்றத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல், அவன் அரைத்துக் கொடுத்த மாவை எடுத்துக் கொண்டு வீட்டை நோக்கிக் கிளம்பினேன்.

# அகில இந்திய காதி, சுதேசி & தொழில் பொருட்காட்சி

**24-12-48**
வெள்ளிக்கிழமை
முதல் ஆரம்பம்

கண்கவர் இனங்கள்

★ டாகுமெண்டரி படங்கள்
★ சங்கீதம், நடனங்கள் (இலவசம்)
★ கலாமண்டபக் கொலு
★ சிறுவர் பொழுது போக்கு

சென்னை, மைசூர், திருவாங்கூர் & கொச்சி சர்க்கார்கள் தமது பிரசித்தமான தயாரிப்புகளின் கண் காட்சிக்காக மிகப் பெரிய ஸ்டால்கள் எடுத்துள்ளனர்.

**காங்கிரஸ் மைதானம்**
தேனாம்பேட்டை, மதராஸ் 6.

# கௌரவ வாழ்க்கை

ஸோமாஸ்

அன்று காலை படுக்கையை விட்டு எழுந்ததும் பளிச் சென்று முதுகில் ஒரு வலி உண்டாயிற்று. மிகுந்த சிரமத்துடன் பல் தேய்த்துக் காப்பி சாப்பிட்டேன். வர வர வலி அதிகமாகிக் கொண்டே வந்தது. வலி அதிகமாக ஆக, இதைச் சுளுக்கு என்று நினைத்தது தவறு என்ற எண்ணமும் வலுத்துக் கொண்டே வந்தது.

நான் எப்பொழுதுமே நாட்டு வைத்தியரிடம்தான் எந்த நோயாயிருந்தாலும் போவது வழக்கம். நாட்டு வைத்தியர் என்றால் எல்லா நாட்டு வைத்தியரிடமும் எனக்கு நம்பிக்கை கிடையாது. என் குடும்ப வைத்தியராகிய ஆயுர்வேத சிங்கம் நித்தியானந்தத்திடம்தான் எனக்கு அபார நம்பிக்கை. அந்த நம்பிக்கை எங்கள் பரம்பரைச் சொத்து. என் தகப்பனாருக்கு நித்தியானந்தத்திடம் திட நம்பிக்கை. அந்த நம்பிக்கையில் எனக்கு ஒரு நம்பிக்கை.

என் தகப்பனாருக்கு ஆங்கில வைத்தியத்தில் நம்பிக்கை கிடையாது.

"கலி பிறந்து விட்டது. உலகத்தில் அதர்மமும் அநியாயமும் ஓங்கி நிற்கின்றன. இல்லாவிட்டால் சாதாரண ஔஷதங்களினால் தீரவேண்டிய வியாதிகளுக்கெல்லாம் டாக்டர் ஊசி போடுவானா? நூற்றுக் கணக்கான இஞ்செக்ஷன்கள் போட்டுக் கொண்டு உடம்பை எத்தனையோ பேர் சல்லடையாய்த் துளைத்துக் கொள்ளுகிறார்களே, இதெல்லாம் யமவாதனைதானே! இது எங்கே ஜனங்களுக்குத் தெரிகிறது? எடுத்ததற்கெல்லாம் டாக்டரிடம் ஓடுகிறார்கள்!" என்று கூறி அலுத்துக் கொள்ளுவார். அத்துடன் "'சுக்குக்கு மிஞ்சின மருந்தில்லை, சுப்ரமண்யனுக்கு மிஞ்சின தெய்வமில்லை' என்று தெரியாமலா பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்! நம்ம வைத்தியத்திலேயே எல்லாவித நோய்க்கும் மருந்து இருக்கிறது!" என்று கூறி, தமக்கு நாட்டு வைத்தியத்தில் உள்ள நம்பிக்கையையும் முருகனிடம் தாம் கொண்டுள்ள பக்தியையும் வெளிப்படுத்துவார்.

ஆனால் இதற்கு நேர் விரோதம் என் மாமனார். ஜலதோஷம் பிடித்தால்கூட இங்கிலீஷ் டாக்டரிடம் போய்விடுவார். நல்லதோ கெட்டதோ, அது இங்கிலீஷ் டாக்டர் மூலமாகத்தான் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது அவரது அபிப்பிராயம். என் சகதர்மிணிக்கும் அவள் தகப்பனாரைப் போலவே ஆங்கில வைத்தியத்தில் அளவு கடந்த மோகம் இருந்தது. தோழிகளுடன் பேசும்போது இடையிடையே ஆங்கில மருந்துகளின் பெயர்கள் இரண்டொன்றைக் கலந்து பேசிப் பெருமிதம் அடைவாள் லக்ஷ்மி.

ஒரு வாரம் ஆகியும் என் முதுகு வலி சொஸ்தமாகவில்லை. அதற்குப் பதிலாக உடம்பு முழுவதும் பரவிக் கைகால்களெல்லாம் வலிக்க ஆரம்பித்தது. இந்த மாறுதலைப் பற்றி வைத்தியர் நித்தியானந்தத்தைக் கேட்டதில், "நம்ம மருந்து இப்பத்தான் உடம்பில் பிடித்து வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறதுங்க. நோய் பரவித்தான் சொஸ்தமாக வேண்டும். பயப்படாதீங்க!" என்று தைரியம் சொல்லிக்கொண்டு வந்தார்.

நானும் தைரியத்தைக் கைவிடாமல் மருந்து சாப்பிட்டேன். வர வர வலியும் அதிகமாகிக்கொண்டு வந்தது; லக்ஷ்மியின் வருத்தமும் அதிகமாகிக் கொண்டு வந்தது.

"விளையாட்டுப் போல ஒரு வாரம் ஆகிவிட்டதே! என்ன நாட்டு மருந்து வேண்டிக் கிடக்கிறது? உங்களைப் பார்த்தால் எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. உங்கள் ராஜபார்ட் நடையும் சிம்மப் பார்வையும் நம்ம பக்கத்து வீட்டுக்காரர்களையெல்லாம் கலக்கி விட்டது! அந்தப் பாழாய்ப்போன வைத்தியன் என்ன சொல்லுகிறான்?" என்று லக்ஷ்மி அலுப்புடன் கேட்டாள்.

"ஒரு மாதம் பத்தியத்துடன் மருந்தை விடாமல் சாப்பிட்டால் அப்புறம் மருந்து சாப்பிட வேண்டிய அவசியமே இருக்காது என்கிறார்."

"இந்த நோய்க்கு என்ன பெயர் சொன்னார்?"

"கீல்வாயு என்று இந்த நோய்க்குப் பெயராம்!"

"அவர் சொன்னது சரிதான்; ஒரு வாரமாகப் பத்தியம் இருந்து மருந்து சாப்

பிட்டதில் உங்கள் உடம்பு ரொம்ப இளைத்து விட்டது. இன்னும் ஒரு மாசம் பத்தியம் என்றால் அப்புறம் மருந்து என்னத்துக்கு? ஆள் இருந்தால்தானே மருந்து சாப்பிட? பேசாமல் நம்ம டாக்டர் சங்கரனிடம் போய் உடம்பைக் காட்டுங்கள். நாலு நாளைக்கு மருந்து சாப்பிட்டு இஞ்செக்ஷன் பண்ணிக் கொண்டால் சரியாய்ப் போய்விடும். மேலும் டாக்டர் சங்கரன் சர்டிபிகேட் கொடுத்தால் உங்களுக்கு லீவும் சுலபமாகக் கிடைக்கும். உங்கள் நித்தியானந்தத்தை நம்பினால் அவ்வளவுதான்!'' என்று லக்ஷ்மி தன் அபிப்பிராயத்தைக் கண்டிப்பான குரலில் தெரிவித்தாள்.

எனக்கும் அவள் சொன்னது சரியென்றே தோன்றியது. உடனே டாக்டர் சங்கரனிடம் போனேன்.

டாக்டர் வீட்டிலிருந்து நான் திரும்பிய போது லக்ஷ்மி வாசலிலேயே காட்சியளித்தாள். நான் ரிக்ஷாவிலிருந்து இறங்கி இராஜபார்ட் நடையில் படியேறி உள்ளே வந்து கொண்டிருக்கும்போதே லக்ஷ்மி பரபரப்புடன் "டாக்டர் என்ன சொன்னார்?'' என்று கேட்டாள்.

''டாக்டர் பரிசோதித்துப் பார்த்தார். மருந்து கொடுத்திருக்கிறார். அப்புறம் இஞ்செக்ஷன் தருவதாகச் சொன்னார். ஆபீஸுக்கு அவரிடம் சர்டிபிகேட் வாங்கி இரண்டு வாரம் லீவுக்கு எழுதி அனுப்பியிருக்கிறேன். உடம்பை அலட்டிக் கொள்ளக் கூடாதாம்'' என்றேன்.

''அது சரி, இந்த வலிக்கு என்ன பெயர் என்று டாக்டர் சொல்லவில்லையா?'' என்று லக்ஷ்மி கேட்டாள்.



''இதற்குப் பெயர் 'ருமேடிஸம்' என்று சொன்னார் டாக்டர்'' என்றேன்.

அது வரையில் சோர்வுடன் காணப்பட்ட லக்ஷ்மியின் முகம் பிரகாசமடைந்தது. கண்களில் ஒரு பெருமிதம் தோன்றியது.

''என்ன சொன்னார்? ருமேடிஸமா? நான் அப்படித்தான் ஏதாவது இருக்கும் என்று நினைத்தேன். இதை உடனே போய்ப் பக்கத்து அகத்துப் பார்வதியிடம் சொல்லிவிட்டு வரவேண்டும். நேற்று அவள் அகத்துக்காரரிடம் உங்களுக்குக் கீல் வாயு என்று சொன்னீர்களாக்கும்! அடியம்மா! அதை வைத்துக் கொண்டு அவள் என்ன பரிகாசம் செய்தாள்!''

''ஏன்? இதில் பரிகாசம் என்ன இருக்கிறது! எனக்கு ஒன்றும் தெரியவில்லையே!''

''உங்களுக்கு என்ன தெரியும்? அந்தப் பாழாய்ப்போன நாட்டு வைத்தியன் எதைச் சொன்னாலும் நம்பிக் கொண்டு இருப்பீர்கள். 'ருமேடிஸம்' என்று சொன்னால் எவ்வளவு கௌரவமாயிருக்கிறது! அதை விட்டுவிட்டுக் கீல்வாயு வாவது! 'என்னடியம்மா, லக்ஷ்மி! உன் அகத்துக்காரருக்குக் கீல். வாயுவாமே!' என்று அந்தப் பார்வதி எத்தனை அகம் பாவத்தோடும் ஏகத்தாளத்தோடும் கேட்டாள்! இப்பொழுது உடனே போய் அவளிடம் உங்களுக்கு வந்திருப்பது 'ருமேடிஸம்' என்று சொல்லி அவள் வாயை அடக்க வேண்டும்!'' என்று சொல்லிவிட்டு லக்ஷ்மி விடுவிடு என்று பக்கத்து வீட்டுக்கு ஓடினாள்.

எனக்குக் குப்பென்று சிரிப்புத்தான் வந்தது. நோயையும் பொருட்படுத்தாமல் சிரித்தேன்.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு என் உடம்பு சுமாராகச் சொஸ்தமாயிற்று. கொஞ்சம் நடமாட ஆரம்பித்தேன். டாக்டர் சில ஆங்கில மருந்துகளை எழுதிக் கொடுத்திருந்தார். நவ நவமான பெயர்களுடன் விதவிதமான மருந்துகளை வாங்கி வந்து என் அலமாரியில் வைத்தேன். நித்தியானந்தம் தந்த பஸ்மங்களும் லேகியங்களும் சூரணங்களும் மாத்திரைகளும் அந்த இடத்தை விட்டு மறைந்தன. ஆமாம்; லக்ஷ்மி தான் அவைகளுக்குச் சீட்டுக் கொடுத்தனுப்பி விட்டாள்.

லக்ஷ்மியின் வற்புறுத்தலின் மேல் டாக்டர் என் வீட்டுக்கு இரண்டு தடவை வந்தார்.

"டாக்டர் என்னத்துக்கு வரவேண்டும் என்றீர்களே, பக்கத்து வீட்டுப் பார்வதிக்காகவே டாக்டரை இரண்டு தடவை அழைத்து வரச் சொன்னேன். இப்பொழுது அவள் வாய் அடைத்துப் போயிருக்கிறது. நமக்கு என்னமோ இங்கிலீஷ் டாக்டரை அழைத்து வர யோக்யதை இல்லை என்று நினைத்துக் கொண்டு அவள் பேசின பேச்சு! அப்பப்பா!" என்று லக்ஷ்மி குலுக்கின குலுக்கு பிரமாதமாய்த் தான் இருந்தது. நான் அதைப் பார்த்து ரஸித்துக் கொண்டே நின்றேன்.

லக்ஷ்மிக்கும் அவள் தோழிகளுக்கும் இடையே மிகவும் சுவாரஸ்யமான சம்பாஷணைகள் என் மருந்து அலமாரியைப் பற்றி நடந்திருக்கின்றன.

"என்னடியம்மா லக்ஷ்மி, மருந்துகள் நிறைய வாங்கியிருக்கிறாரே, உன் அகத்துக்காரர்!"

இது பக்கத்து வீட்டுப் பார்வதியின் கேள்வி.

"அவருக்கு மாத்திரம்தான் மருந்து என்று நினைத்தாயா? எனக்குங்கூடத் தான்! என்ன செய்வது! ஏதாவது உடம்புக்கு வந்து கொண்டே யிருக்கிறது! மாதம் இந்த மருந்துச் செலவே ஐம்பது ரூபாய்க்கு ஆகிறது!" என்று சொல்லும்போது லக்ஷ்மியின் குரலில் ஒரு பெருமிதம் தொனிக்கும்.

இதையெல்லாம் என் அறையில் இருந்து கேட்டு ரஸிப்பேன். வீட்டில் எல்லோருக்கும் நோய் பிடுங்கித் தின்னும் போது என் மனம் ரொம்பப் பாடுபடும். மருந்துக்கு ஆகும் செலவைக் கண்டு நான் திடுக்கிட்டுப் போவேன்.

லக்ஷ்மிக்கு ஒரு மருந்து, அடியேனுக்கு ஒரு மருந்து, இப்படி மாதம் பிறந்ததும் மருந்துப் புட்டிகள் சகிதம் வீட்டுக்கு வருவேன். அன்றைக்கும் அதேமாதிரி வந்தேன்.

"உடம்பு இப்பொழுது எப்படி யிருக்கிறது?" என்று லக்ஷ்மி பையைக் கையில் வாங்கிக் கொண்டே கேட்டாள்.

"உடம்புக்கு என்ன! அது தன்பாட்டுக்கு வாங்கிக் கொடுக்கும் மருந்தையெல்லாம் சாப்பிட்டுக் கொண்டே யிருக்கிறது. அதற்குப் பணத்தைப் பற்றி ஏதாவது கவலை யிருந்தால்தானே!" என்றேன் நான் அலுப்புடன்.

"பணத்தை விட்டுத் தள்ளுங்கள்; இப்பொழுது நம் கௌரவம் அக்கம் பக்கத்தில் ஒரு படி உயர்ந்திருக்கிறதே, அதைச் சொல்லுங்கள்!" என்றாள் லக்ஷ்மி.

---

# டாக்டர் விளையாட்டு

விஜயம்

அந்தக் கடை வாசலில் ஜனக் கூட்டம் பிரமாதமாயிருந்தது. ஒருவரோடு ஒருவர் முண்டியடித்துக் கொண்டு ஜனங்களெல்லாம் ஒரே சத்தம் போட்டனர். கடைக்காரர் வெளியே வந்து ஒரு பெஞ்சில் ஏறி நின்று கொண்டார்:

"மகா ஜனங்களே, நீங்கள் எல்லோரும் 'க்யூ' வரிசையில் நின்று சத்தம் போடாமலிருந்தால் ஆளுக்கு ஒரு பிஸ்கோத்துப் பெட்டி கொடுப்பேன். நீங்கள் சொன்னதைக் கேளாமல் ரகளை செய்தால் கடையைச் சாத்திக் கொண்டு போய்விடுவேன்!"

உரத்த குரலில் கடைக்காரர் செய்த இந்தக் குட்டிப் பிரசங்கத்தைக் கேட்டதும் அந்த ஜனக் கூட்டத்தில் பளிச்சென்று அமைதி ஏற்பட்டது. கூட்டம் கலைந்து எல்லோரும் ஒருவர் பின் ஒருவராக நின்று விட்டனர். நீளமான ரயில் வண்டியைப் போல அவர்கள் நின்றதும் கடைக்காரர் ஆளுக்கு ஒரு பிஸ்கோத்துப் பெட்டி கொடுத்தார். எல்லோரும் அமைதியாக வாங்கிக் கொண்டு காசைக் கொடுத்தனர்.

அந்தச் சமயம் சிவராமன் ஓடோடியும் கடைக்கு வந்தார். ஜனங்கள் 'க்யூ' நிற்பதைப் பொருட்படுத்தாமல் அவர்களை இடித்துத் தள்ளிக்கொண்டு கடையை நெருங்க முயற்சி செய்தார்.

"என்ன ஐயா, இது? நாங்களெல்லாம் 'க்யூ'வில் நிற்கிறோமே, தெரியவில்லையா உங்களுக்கு? எங்களுக்குப் பின்னாலே நின்று வரிசைக் கிரமப்படி வந்து பிஸ்கோத்து வாங்கிக் கொள்ளுங்கள்" என்று ஒருவன் நியாயம் சொன்னான்.



இதைக் கவனித்த ஒரு முரடன், 'க்யூ'வில் நிற்பதையும் விட்டுப் பர பர வென்று, ஓடி வந்து, "என்ன, ஐயா! அந்த ஆள் கிட்ட நியாயம் பேசுகிறாய்? இவ்வளவு பெரிய ஆளுக்கு 'க்யூ'விலே நின்று சாமான் வாங்கு என்று சொல்லித் தர வேண்டுமோ? பளீர் என்று கன்னத்தில் ஒன்று கொடுத்தால் தானே தெரிகிறது!" என்று அடித் தொண்டையிலிருந்து சொல்லிவிட்டு, சிவராமனின் கன்னத்தில் அறையக் கையை ஓங்கினான். அவ்வளவுதான், சிவராமனின் முகத்தைக் கவனித்துப் பார்த்தானோ, இல்லையோ அந்த முரட்டு மனிதனின் ஓங்கின கை தானாகவே, கை காட்டி மரம் மாதிரி சாய்ந்தது. அவன் சிவராமனைப் பரிதாபத்தோடு பார்த்துவிட்டு, "ஐயோ, பாவம்! போனால் போகிறது. நீங்கள் முன்னாலே போய் நின்று முதலிலே பிஸ்கோத்து வாங்கிக் கொண்டு போங்கள்!" என்று அன்பு கனியும் குரலில் சொன்னான்.

அந்த முரடனே அப்படிப் பரிந்து பேசி அன்பும் அநுதாபமும் காட்டவே, கூட்டத்தில் எல்லோரும் சிவராமனுக்கு வழிவிட்டு, 'க்யூ' வரிசையில் முதல் இடம் கொடுத்தனர்.

சிவராமன் பிஸ்கோத்துப் பெட்டியை வாங்கிக் கொண்டு கடைக்காரனிடம் காசைக் கொடுத்து விட்டுத் திரும்பினார். அவர் திரும்பி இரண்டு அடி எடுத்து வைத்திருப்பார். அந்த முரடன் அவர் வழியை மறைத்து வாயில் வந்தபடி பேச ஆரம்பித்தான்.

"என்ன அயோக்கியத்தனம் இது! போனால் போகிறது என்று உமது நிலைமையைப் பார்த்து

இரக்கம் காட்டினை் வேஷமா போடு கிறீர்?" என்று கோபத்துடன் கூறி அவரை விறைத்துப் பார்த்தான்.

சிவராமனுக்கு ஒன்றும் புரியவில்லை. முதலில் பரிந்து பேசிய அந்த முரடன் சற்று நேரத்துக்கெல்லாம் அடிக்க வருவானேன் என்று யோசித்து யோசித்துப் பார்த்தார். யோசனை செய்யும்போது நெற்றியில் கை வைத்தார். வைத்த இடத்தில் ஏதோ ஜில்லென்று பட்டது. அவர் கையோடு ஒரு பஞ்சு ஒட்டிக் கொண்டு கீழே விழுந்தது. அடாடா! அதில் என்ன ரத்தம்! அது எங்கே யிருந்து வந்தது? ஒன்றும் புரியாமல் சீக்கிரமாக வீட்டுக்குப் போனார். வாசற்படி ஏறி வீட்டுக்குள்ளே போனதும் சுந்து எதிரே ஓடி வந்தான். அவனை அவர் பொருட்படுத்தாமல் உள்ளே கலவரத்துடன் போய் உட்கார்ந்து யோசனையில் ஈடுபட்டார்.

"அப்பா! எங்கே அப்பா, நான் உன் நெற்றியில் அப்பொழுது போட்ட அந்தப் பஞ்சு? கீழே விழுந்து விட்டதா? அதற்குத்தான் நான் அப்போதே சொன்னேன், கட்டுப் போட்டு விடுகிறேன் என்று! நீதான் வேண்டாம் என்றாய்!" என்று சொல்லிக்கொண்டே வந்த சுந்து, சிவராமனுக்கு எதிரே உட்கார்ந்து கொண்டான்.

சிவராமனுக்கு இப்போதுதான் விஷயம் புரிந்தது. சுந்துவோடு 'டாக்டர் விளையாட்டு' விளையாடிக் கொண்டிருந்தபோது அவன் தன் நெற்றியில் சிவப்பு மையில் நனைத்த பஞ்சை ஒட்ட வைத்தது ஞாபகம் வந்தது. கடை வாசலில் ஜனங்கள் முதலில் விஷயம் தெரியாமல் தன்னிடம் பரிவு காட்டியதும் பிறகு அடிக்க வந்ததும் எல்லாம் நியாயம் என்றும் தெரிந்தது.

---

# காலக்ஷேபம்

---

### ஓகோ!

ஒரு ஸ்திரீ ஒரு ஜவுளிக் கடையில் நுழைந்து வெகுநேரம் வரையில் பல ரகப் புடவைகளை எடுத்துப் போடச் சொல்லிப் பார்வையிட்டாள். அந்தக் கடை வேலைக்காரனுக்கு அலுப்பு ஏற்பட்டுவிட்டது.

ஸ்திரீ (கோபத்துடன்) :—இந்தக் கடை முதலாளி எங்கே? அவருக்கு உன்னை விடக் கொஞ்சம் மூளை இருக்கும் என்று நினைக்கிறேன்.

வேலையாள் :—ஆமாம், அம்மா! அது வாஸ்தவம். நீங்கள் வருவதைப் பார்த்து விட்டுத்தான் அவர் வெளியே போனார்!

★

### அவன் பார்த்தது!

அவள் (குமாஸ்தாவின் மனைவி) :—நம்ம வீட்டுக்கார முதலியாரைப்போல் பெரிய பணக்காரராக இருந்தால் நீங்கள் எப்படி யிருப்பீர்கள் என்று ஒரு தடவைகூடக் கற்பனை செய்து பார்த்ததில்லையா?

குமாஸ்தா :—ஆகா! பார்த்திருக்கிறேன். என் சம்பளம் அவருக்கு வந்தால் அவர் என்ன செய்வார், எப்படி யிருப்பார் என்றெல்லாம் எண்ணிப் பார்த்திருக்கிறேன்!

### உண்மை!

ஒரு கப்பல் பம்பாய்த் துறைமுகத்துக்கு வந்து நின்றது. மாலுமிகள் எல்லோரும் லீவு வாங்கிக்கொண்டு கப்பலை விட்டுச் சென்றனர். ஒருவன் மட்டும் கப்பலிலேயே தங்கிவிட்டான்.

ஆபீஸர் (அதிசயத்துடன்):—ஏன், நீ மட்டும் லீவு கேட்கவில்லை? அவர்களெல்லாம் மனைவியையும் குழந்தைகளையும் பார்க்க வேண்டும் என்று போயிருக்கிறார்களே! உனக்கு இன்னும் கல்யாணம் ஆக வில்லையா?

மாலுமி :—இல்லை, இல்லை. இந்தக் கப்பல் மாலுமிகளிலேயே நான் ஒருவன் தான் விவாகமானவன். அதனால்தான் வீட்டுக்குப் போகவில்லை!

★

### அவர் முட்டாளா?

மானேஜர் (படித்துக்கொண்டே கோபத்துடன்) :—மிஸ்டர் சிவராமன், நீங்கள் அன்றாடக் குறிப்புகளை எழுதும்போது முட்டாளுக்குக்கூடப் புரியும்படியான முறையில் எழுதவேண்டும்.

சிவராமன் (பணிவுடன்) :—என் ரிபோர்ட்டில் உங்களுக்கு எந்த இடம் விளங்கவில்லை?



ருசிகரமான "ஓவல்டின்"
நோய்க்குப் பின் சீக்கிரத்தில்
ஆரோக்கியத்தையும் வலுவையும்
திரும்ப அடையும்படி
செய்கிறது
AN IDEAL BEVERAGE & COMPLETE FOOD
OVALTINE




**Bulletin of the Government Oriental Manuscripts Library, Madras.**

தமிழ் பாஷைக்குப் பெரும் சத்ருக்களாய் விளங்கியவை இரண்டு. ஒன்று ஸ்ரீமான் கறையான் அவர்கள்; மற்றொன்று தமிழ் மக்களுடைய சொந்த அசிரத்தை. இந்த இரண்டிலிருந்தும் பல அருந் தமிழ் இலக்கியங்களைக் காப்பாற்றித் தமிழ் மொழிக்குப் பேருபகாரம் செய்தவர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள்.

ஐயர் அவர்களுக்கு அடுத்தபடியாக ஸ்ரீமான் கறையான் அவர்களுக்கு ஜன்ம சத்ருவாக விளங்குவது, சென்னை சர்க்கார் கீழ்நாட்டுக் கையெழுத்துப் பிரதிப் புத்தகசாலையாகும். மேற்படி வாசகசாலையில் ஏறக்குறைய 7000 அச்சிடப்படாத தமிழ்க் கையெழுத்துப் பிரதிகள் இருக்கின்றன. சமஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம், மராட்டி முதலிய பல பாஷைகளிலும் இதுவரை அச்சிடப்படாத பல கையெழுத்துப் பிரதிகள் அங்கு பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. மேற்படி புத்தகசாலை நிர்வாகிகள் வருஷத்துக்கு இரண்டு பிரசுரங்களை வெளியிட்டு, அதில் மேற்படி கையெழுத்துப் பிரதிகளைக் கொஞ்சங் கொஞ்சமாக வெளியிடுவதென்று முடிவு செய்து, முதல் பிரசுரத்தையும் அவ்விதமே வெளியிட்டிருக்கிறார்கள். முதல் பிரசுரத்தில் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அருளிச் செய்த மாயாவிவரணம் என்ற நூலும் பூதவிலாஸம் என்ற தமிழ்க் காவியமும் வெளியாகி யிருக்கின்றன. இவற்றைத் தவிர, கன்னடம், மலையாளம், தெலுங்கு, உருது கையெழுத்துப் பிரதிகள் சிலவும் வெளியாகி யிருக்கின்றன.

## குங்குமம்

பெண் கல்வி, பெண்கள் முன்னேற்றம், பெண்களுக்குச் சம உரிமை போன்ற விஷயங்கள் சமீபகாலம் வரையில் பெரும்பாலும் ஆண்களாலேயே பேசப்பட்டும் எழுதப்பட்டும் வந்தன. பத்திரிகைகளில் வெளியாகும் மாதர் பகுதிகளையெல்லாம் புனை பெயர்களில் ஒளிந்துகொண்டு அனேகமாக ஆண்கள் எழுதுவது வழக்கம்.

இப்பொழுது காலம் மாறிவிட்டது. மாதர் முன்னேற்றத்துக்காக மாதர்களாலேயே நடத்தப்படும் மாதர் பத்திரிகைகள் பல தோன்றியிருக்கின்றன. அத்தகைய பத்திரிகைகளின் திலகமாகத் தோன்றியிருக்கிறது ஸ்ரீமதி எஸ். விசாலாட்சி அம்மாளை ஆசிரியையாகக் கொண்ட 'குங்குமம்.'

பாரத தேசத்துப் பழம்பெரும் நாகரிகத்தின் சின்னம் குங்குமம்; மாதரது வாழ்வின் மங்கலம் குங்குமம். 'குங்குமம்' நாளுக்கு நாள் முன்னேற்ற மடைந்து வருங்கால பாரத தேசத்து வீராங்கனைகளின் திலகமாக விளங்குமென்று நம்புகிறோம்.

## வாழ்க்கையில் வெற்றி

வர்ணம் பூசிக் காலங் கழித்து வந்த ஹிட்லர் ஐரோப்பாக் கண்டத்தையே நடுநடுங்க வைத்தார். ஒரு ஏழை விறகு வெட்டியின் மகனாகப் பிறந்த ஆப்ரகாம் லிங்கன், இரு முறை அமெரிக்க ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். குழந்தைப் பருவத்திலே ஒரு வேளைச் சாப்பாட்டுக்குக்கூட வழியில்லாமல் திண்டாடிய ராக்பெல்லர், சாகும்போது முப்பது கோடிப் பவுன்களுக்கு அதிபதியானார். எளிய குடும்பத்தில் எத்தனையோ இடையூறுகளுக்கு மத்தியில் பிறந்து வளர்ந்தவர்கள் வாழ்க்கையில் எப்படிப் பல வெற்றிகள் அடைய முடிந்தது? இதைப் பற்றி ஜனாப் எம். ஆர். எம். அப்துல் ரஹீம் தாம் எழுதிய வாழ்க்கையின் வெற்றி என்ற புத்தகத்தில் தெளிவாக விளக்கியுள்ளார். வாழ்க்கையில் வெற்றியடைய விரும்பும் ஒவ்வொரு இளைஞனும் படிக்க வேண்டிய புத்தகம். விலை ரூ. 2-8-0.

# கண்டியிலே ஓடும் தண்ணீர் கசந்து போச்சுது!

கோஸ்லந்தை—சி. கயராஜ்



கங்காணியாரே! ஐயா கங்காணியாரே!
கப்பலேற்றிக் கூட்டிவந்த கங்காணியாரே!

தரகுபணம் வாங்கிக்கிட்டுத் தந்திரமாகத்
தாய்நாட்டில் வாழ்ந்தவரைத் தானழைத்தீரே!
வரகுசோறு தின்னுக்கிட்டு வாழ்ந்திருந்தோரை
வாங்களென்று கைபிடித்து அழைத்துவந்தீரே!

மண்டபத்தில் வந்துநின்று மங்களம்பாடி
மன்னரைப்போல் வாழ்ந்திடலா மென்றுமேகூறி
கண்டிரயில் வண்டியிலே ஏற்றிவிட்டீரே!
கையெடுத்துக் கும்பிடுநீர் போட்டுநின்றீரே!

ஆங்கிலத் துரையிடத்தில் அடிமையுமாகி
ஆவிபிரிந்திடு மட்டும் வேலையுஞ்செய்து
பாங்காடு பொங்கும்நல்ல பயிரைஉண்டாக்கிப்
பாரினிலே செழிப்புமிக்க தேசமுமாக்கி

கண்டபலன் கண்கலங்கி நிற்பதுதானா?
கப்பலேறி, அந்தக்கரை செல்வதுதானா?
கண்டியிலே கொள்ளுப்பாட்டன் நல்லமுறையாகக்
கஷ்டப்பாடு பட்டதற்குக் கூலிஇதுதானா?

கம்பனிக்கு ரெண்டுவிலை போட்டுக்கிட்டீங்க!
கமிஷனிலே கொள்ளைலாபம் பெற்றுக்கிட்டீங்க!
கம்பீரமாய்க் கங்காணி பட்டமும் வாங்கிக்
காடுபூமியெல்லாம் நீங்க தேடிக்கிட்டீங்க!

கண்டிரயில் ஏற்றிவிட்ட கங்காணியாரே!
கண்திறந்து பாரும்ஐயா கங்காணியாரே!
கண்டியிலே ஓடும்தண்ணீர் கசந்துபோச்சுது!
கஞ்சித்தண்ணி குடிப்பதற்கும் பஞ்சம் வந்தது!

கதிர்காம பூமியென்று யெண்ணி வந்திட்டோம்!
கருணைகொஞ்சம் இருக்குமென்று நம்பிவந்திட்டோம்!
சதிகாரர் சூழ்ச்சிகளைத் தானறியாமல்
சன்மநேரம்போல இதை யெண்ணி வாழ்ந்திட்டோம்!

பெரஹரா! 'சாது, சாது' பேச்சிலேதானா?
பிரபுக்களே! புத்தர்சொன்ன இப்படித்தானா?
அரஹரா! முருகா! எங்கள் அப்பனேகேளு!
எல்லோருக்கும் பொதுவில்நின்று நியாயத்தைக்கூறு!




எஸ். வி. எஸ்.

'அவர் அஞ்சாத பொருளில்லை அவனியிலே' என்று பாரதியார் கூறினார். அது எங்கள் ஊர் கார்மேகம் பிள்ளையைப் பார்த்து விட்டுத்தான் பாரதியார் அப்படிப் பாடினாரோ என்ற ஐயம் எனக்கு எழுவதுண்டு.

தூரத்தில் சிவப்புத் தலைப்பாகையைக் கண்டாரானால் போதும், அவர் குலை நடுங்கிப் போவார். உடனே தம் வேலையாளைக் கூப்பிட்டு "டேய் முத்து! 'ஏட் ஐயா' இங்கே எதுக்கடா வாராரு, பாழாய்ப் போற மனுஷன்! சரி. எதுக்கும் என்னைக் கேட்டாரானால் நான் வீட்டில் இல்லை என்று சொல்லிவிடு" என்று கூறிவிட்டு, வீட்டுக்குள் ஒளிந்து கொள்வார்.

உள்ளூர் 'ஏட்'டைப் பார்த்தே கார்மேகம் பிள்ளை இந்தப் பாடு படுவார் என்றால் தாசில்தார், கலெக்டர் முதலிய அதிகாரிகள் வந்து முகாம் போட்டு விட்டார்களானால் கேட்க வேண்டியதில்லை. அதுவும் இந்தக் கண்ட்ரோல் ராஜ்யத்தில் அவர் ஒவ்வொரு நாள் பொழுது போகும் பொழுதும் 'கண்டம் தப்பியது' என்று சொல்லிக் கொண்டுதான் பொழுதைப் போக்கி வருகிறார். என்ன செய்வார், பாவம் கார்மேகம் பிள்ளை!

அவர் சமீபத்தில் ஒரு கேஸில் அகப்பட்டுக் கொண்டிருந்தார். அவர் மருமகன் ஒரு காகக்கடைச் செட்டியாரிடம் நாலு வருஷங்களுக்கு முன் கொஞ்சம் கடன் வாங்கியிருந்தார். அப்பொழுது அந்தக் கடன் பத்திரத்தில் ஜாமீன் கையெழுத்து ஒன்று கார்மேகம் பிள்ளை போட்டார். தம்மை மருமகன் ஏமாற்றமாட்டான் என்று நம்பித்தான் போட்டுத் தொலைத்தார். அது இப்பொழுது பெரிய தொல்லையாக வந்து சேர்ந்தது. அசலும் வட்டியுமாகக் கார்மேகம் பிள்ளைதான் கொடுக்க வேண்டும் என்று கோர்ட்டில் தீர்ப்பாகி விடும் போலிருந்தது. இதனால் அவர் இராப்பகல் தூக்கமின்றி "என்ன பைத்தியக்காரத்தனம் செய்து தொலைத்தோம்! எவன் கடன் வாங்கி, எக்கேடுகெட்டுப் போனால் நமக்கு என்ன? நான் ஏன் கையெழுத்துப் போட்டுத் தொலைத்தேன்?" என்று மிகவும் நொந்து கொண்டிருந்தார்.

இந்தச் சமயம் பார்த்துத்தான் ஒரு நான் மணியம் மாணிக்கம் பிள்ளை அவரிடம் வந்து சேர்ந்தார்.

"மாணிக்கம் பிள்ளை! எங்கே இவ்வளவு தூரம்?" என்று முகத்தில் மகிழ்ச்சி தெரியத்தான் கேட்க முயற்சித்தார். ஆனால் 'இந்த மனுஷன் இப்போது என்ன சொல்லிக் கழுத்தறுக்கப் போகிறானோ' என்ற கார்மேகம் பிள்ளையின் உள்ளத்தில் துடித்துக் கொண்டிருந்த பயம் அவர் முகத்தில் தாண்டவமாடியது!

அதி சூக்ஷ்ம புத்தி படைத்த ஸ்ரீமான் மாணிக்கம் பிள்ளை, இதைத் தெரிந்து கொண்டு விட்டார். "ஒன்றுமில்லை; வயல் காட்டுக்குப் போகவேண்டிய ஜோலியிருக்கிறது. போகிற வழியில், உங்கள் ஞாபகம் வந்தது. உங்களால் ஆக வேண்டிய ஒரு சிறு காரியமும் ஞாபகத்துக்கு வந்தது. அதையும் முடித்துக்கொண்டு..."

"என்ன? என்னால் ஆகவேண்டிய காரியமா?" என்று பயந்துகொண்டே சொன்னார் கார்மேகம் பிள்ளை.

"பிரமாதம் ஒன்றுமில்லை. பெரிய பண்ணை நிலத்துக்கு வடகிழக்கு மூலையிருக்கிறதல்லவா!"

"ஆமாம்."

"அங்கே ஒரு பெரிய புளிய மரம் இருந்ததல்லவா?"

"ஆமாம்."

"அது புறம் போக்கைச் சேர்ந்தது என்று உங்களுக்குத்தான் தெரிந்திருக்குமே!"

"ஆமாம்; நன்றாகத் தெரியும்."

"அதைப் பெரிய பண்ணை முதலியார் வெட்டி விட்டதும் உங்களுக்குத் தெரிந்திருக்கும்!"

"ஆமாம்."

"அதைப் பற்றி, ஒரு ரிப்போர்ட் உள்ளூர் பிரமுகர்கள் இரண்டு பேரு சேர்ந்து செய்யணும்னு சொல்லி தாசில்தார் சொன்னார். அதற்கு நீங்கள் ஒரு ரிப்போர்ட் எழுதி......"

இதைக் கேட்டதும் கார்மேகம் பிள்ளை 'என்ன? என்ன? ரிப்போர்ட்டா? எழுதணுமா? அப்படியானால் நான் 'ஆமாம்' 'ஆமாம்' என்று சொல்லியிருக்க மாட்டேனே! புறம்போக்கில் மரமிருந்

ததே தெரியாது: அதைவிடத் தெரியாது அதைப் பெரிய பண்ணை முதலியார் வெட்டியது என்று சொல்லியிருப்பேனே! இதென்ன இப்படி எக்கச்செக்கமாக அகப்பட்டுக் கொண்டேனே?" என்று தவியாய்த் தவித்தார்.

இருந்தாலும் "மாணிக்கம் பிள்ளை, ரிப்போர்ட் கிப்போர்ட் எல்லாம் வேண்டாம். வேறு யாரிடமாவது வாங்கிக் கொள்ளுங்கள். என்னை விட்டு விடுங்கள்" என்று கெஞ்சாத குறையாகக் கெஞ்சினார்.

"ரிப்போர்ட் எழுதப் பின்வாங்குகிறீர்களா? அதெல்லாம் வேண்டாம். சும்மா ஒரு கையெழுத்து மட்டும் போட்டு வையுங்கள் இந்தக் காகிதத்தில்; பாக்கியெல்லாம் நான் எழுதிக் கொள்கிறேன்" என்று சொல்லி ஒரு வெள்ளைக் காகிதத்தை நீட்டினார் மாணிக்கம்பிள்ளை.

"ஐயோ! கையெழுத்தா? மாட்டவே மாட்டேன்! தயவு செய்து என்னை விட்டு விடுங்களேன். டேய் முத்து! ஐயாவுக்கு ஒரு தார் வாழைக்காய், ஒரு கட்டு வெற்றிலை, ஐம்பது வாழையிலை இருபது தேங்காய் எல்லாம் கொண்டு வந்து கொடுடா! மாணிக்கம்பிள்ளை, இன்னும் என்ன வேண்டுமானாலும் கேட்டு வாங்கிக் கொள்ளுங்கள். கையெழுத்து மட்டும் வேண்டாமே!" என்று கெஞ்சினார்; கால்மேல் விழாத குறைதான்.

"ஒரு கையெழுத்துப் போடுவதற்கு இவ்வளவு பயப்படுறீங்க! ஒவ்வொருத்தர் என்னவெல்லாமோ செய்றாங்களாம். போகட்டும்; கொடுக்கிற வாழைக்காயைக் கச்சல் இல்லாமலாவது கொடுங்கள்" என்றார் மாணிக்கம் பிள்ளை.

"அது தரச் சொல்கிறேன்!" என்றார் கார்மேகம் பிள்ளை பெருமிதத்துடன்.

"நேரமாகிறது, நான் வரட்டுமா? வீட்டுக்கு அனுப்பி வைக்கிறீங்களா?" என்றார் மாணிக்கம் பிள்ளை.

"ஆகட்டும்" என்றார் கார்மேகம்.

• • •

மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு மாணிக்கம் பிள்ளை தம் வீட்டுக்குள் நுழைந்தார். மாணிக்கம் பிள்ளையின் சம்சாரம், "முத்து ஒரு தார் வாழைக்காய், ஒரு கட்டு வெற்றிலை, ஒரு கட்டு வாழையிலை, தேங்காய், வாழைத்தண்டு எல்லாம் ஐயா கொடுக்கச் சொன்னாங்க என்று கொடுத்து விட்டுப் போயிருக்கிறான்" என்றாள்.

"பார்த்தாயா! காலையிலே குழந்தை கோட்டுப் புஸ்தகத்திலிருந்து கால்கடுதாசி கிழிச்சதுக்கு அவ்வளவு ரகளை கட்டினாயே! அந்தக் கால் கடுதாசி, பத்து ரூபாய்ப் பெறுமானமுள்ள சாமானைக் கொண்டு வந்து நம் வீட்டில் தானாகச் சேர்த்து விட்டது பார்த்தாயா?" என்றார் மாணிக்கம்.

"எப்படி?" என்றாள் அந்த அம்மாள்.

"கார்மேகம் பிள்ளை ஒரு ஜாமீன் கையெழுத்துப் போட்டுவிட்டுத் தவியாய்த் தவிக்கிறார். இந்தச் சமயம் வேறு மனே ஒரு கையெழுத்துப் போடச் சொன்னால்கூடப் பயப்படுவார் என்பது தெரிந்துதான் சும்மா ஒரு கதையைக் கட்டிச் சொல்லி இந்தக் கால் கடுதாசியில் கையெழுத்துப் போடச் சொன்னேன். அவர் கையெழுத்துப் போட மறுத்து எனக்கு வேண்டியதெல்லாம் கொடுத்து அனுப்பியிருக்கிறார்" என்று பெருமிதத்துடன் கூறினார்.

'ஒரு கையெழுத்திலிருந்து மீள வழியில்லை; அதற்குள் இன்னொரு கையெழுத்துக்குள் அகப்பட்டுக்கொள்ள இருந்தேனே. அந்த ஆபத்தை வெறும் வாழைக்காயும் வாழையிலையும் கொடுத்தே மீண்டுவிட்டேனே! ஆகா என் சாமர்த்தியம் யாருக்கு வரும்!' என்று எண்ணிக் கார்மேகம் பிள்ளையும் மனசுக்குள் ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தார்.

---




நோயாளிக்குத் தூக்க மருந்து கொடுத்தும் தூக்கம் வரவில்லை என்று டெலிபோனில் புகார் வந்தது. அதற்கு டாக்டர் அளித்த பதில்:

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி

## 235. நாலுவது ஒன்றுவது!

சமுத்திரத்தைப் பற்றிக் கொஞ்சம் ஆராயலாம். சமுத்திரம் உலகம் முழுவதும் பரவி வியாபித்திருக்கிறது. எவ்வளவு தூரத்தில் எட்டியுள்ள வளைகுடா வானாலும் அது சமுத்திரத்தைச் சேர்ந்ததுதான்.

சில இடங்களில் சமுத்திரமானது ஒடுங்கி மைல் கணக்காகவே நாட்டுக்குள் செல்வதுண்டு. அதற்கு "நெடுங்கழி" என்று பெயர்.

மேலே சொன்ன வளைகுடாக்களுக்குள்ளும் நெடுங் கழிகளுக்குள்ளும் மாத்திரம் செல்வதல்ல அந்த சமுத்திரம்.

வேறு எங்கெல்லாமோ செல்லுகிறது அது. சமுத்திரத்திலுள்ள நீர் தானே வான மெங்கும் ஆவியாய்ப் பரவுகிறது. அந்த ஆவி மேகமாய்த் திரளுகிறது. மேகம் உலகம் முழுவதும் ஓடி மழையாய்ப் பெய்கிறது.

மழை நீரானது புல் பூண்டுகளுக்கெல்லாம் வேரில் இருந்து தளிர் வரையும் போய் நிறைகிறது. அப்படியே சகல பிராணிகளுக்குள்ளும், நம்முடைய மானுஷ உடலுக்குள்ளுமே சென்று நிறைகிறது. ஆகவே எல்லாம் சமுத்திர மயந்தான்.

இனி:

பசும் புல்லை எடுத்துக் கொண்டோமானால் அதில் சமுத்திரம் வந்து பெருகி இருக்கிறது என்று சொல்லுதல் பொருந்தும். ஆனாலும் புல்லைத் தனிப்பட்ட நீர்ப்பகுதி என்றும் சொல்லலாம். ஆகவே புல்லைப் பார்த்து இது சமுத்திரம் அல்ல என்றும சொல்லலாம், சமுத்திரமேதான் என்றும் சொல்லலாம்.

கடவுள் தத்துவமானது எங்கும் ஒரே படியாய் ஒவ்வொரு வஸ்துவிலும் நிறைந்து நிற்கிறது. (நீரைப் போல) ஆனாலும் ஒவ்வொரு வஸ்துவிலும் ஒரு நியதியின் படியே இயங்குவதால் தனிப்பட்ட பல வஸ்துக்கள் என்றும் கடவுள் தத்துவத்தைக் குறிப்பிடலாம்.

மேலும் எந்த வஸ்துவையும் சுட்டி இது கடவுள் அல்ல என்றும் சொல்லலாம்; கடவுள்தான் என்றும் சொல்லலாம். (கடவுள் தத்துவம் தான் எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருக்கிறதே!)

**ஒன்றே என்னில் ஒன்றே யாம்,**
**பலஎன் றுரைக்கில் பலவே யாம்**
**அன்றே என்னில் அன்றே யாம்,**
**ஆம்என் றுரைக்கில் ஆமே யாம்.**

கடவுள் தத்துவமானது எங்கும் நிறைந்ததாய், எல்லாவற்றிலும் நிறைந்ததாய், எல்லா வற்றையும் இயக்குவதாய் இருக்கிறது. ஆகையால் கடவுளை உண்டென்று சொல்லுவதில் கஷ்டம் இல்லை.

இனி,

எல்லாவற்றையும் இயக்குவதாய் இருந்தாலும் அறுதியான ஒரு நியதி தத்துவத்தின்படியே எல்லா இயக்கமும்—உயிர் வர்க்கங்களின் பிறப்பு,

வளர்ச்சி, மறைவு யாவுமே—நிகழ்கின்றன. ஆகவே நியதி ஒன்றுதான் மிஞ்சுகிறது. கடவுளது செயல் என்று சொல்லுவதற்கு ஒன்றும் இல்லாததால், கடவுளை இல்லை என்றும் சொல்லி விடலாம்.

**உண்டே என்னில் உண்டே யாம்**
**இலதேன் றுரைக்கில் இலதே யாம்.**

மேலே சொன்ன நியதியின் சர்வ வியாபகம் காரணமாக ஆணவமாகிய 'நான்' என்பதும் கடவுள் தத்துவத்திற்குள்ளேயே அடங்கி விடுகிறது. கடவுள் தத்துவமானது இல்லை என்ற லக்ஷணத்துக்கு வரும்போது அதன் சிறு பகுதியாகிய ஆணவமும் இல்லை என்று தானே ஆகும்.

இறைவன் காரியமே அந்த அழகில் இருக்கிறதாம், பிறகு நாம் ஒருவர் உண்டென்று சொல்லுவதற்கு இடம் எங்கே? இப்போது பாடலைப் பார்க்கலாம் :

**சந்தம்.**

***தான தான தான தன்***
***தான தான தான தன்***

**ஒன்றே என்னில் ஒன்றே யாம்,**
**பலஎன் றுரைக்கில் பலவே யாம்.**

**அன்றே என்னில் அன்றே யாம்,**
**ஆம்என் றுரைக்கில் ஆமே யாம்.**

**உண்டே என்னில் உண்டே யாம்,**
**இலதேன் றுரைக்கில் இலதே யாம்,**

**நன்றே நம்பி குடிவாழ்க் கை!**
**நமக்கிங் கென்றே பிழைப்பம் மா!**

1. **ஒன்றே யென்னில் ஒன்றே யாம் :** வேறொன்று என்பது இல்லாமல் எங்கும் நிறைந்து ஒருவனாக இருக்கிறான் இறைவன், என்று சொல்லலாம். இது தான் உண்மை. ஆனாலும் பல வகைப்பட்ட தனித்த இயக்கங்கள் போலவும் தோற்றமளிக்கிறான் அவன். அதனால் பல என்றும் சொல்லலாம்.

2. **அன்றே யென்னில் அன்றே யாம் :** ஒரு வஸ்துவைக் குறித்து 'அது அல்ல இறைவன்' என்று சொல்லுவது சரியான வார்த்தைதான். ஒரு புல்லைப் பார்த்து, இது அல்ல எங்கும் நிறைந்த இறைவன், என்று சொல்லுவதில் பொருத்தம் இருக்கத்தானே செய்கிறது. ஆனாலும் ஒரே மயமான இறைவனது பகுதிதானே புல். அதனைப் புல்லும் இறைவன்தான் என்று சொல்ல இடம் தருகிறது—'' **ஆம் என் றுரைக்கில் ஆமே யாம்** ''

3. **உண்டே என்னில் உண்டே யாம் :** உலகத்தில் எண்ணிறந்த அற்புதமான தத்துவங்களைப் பார்க்கிறோம். அண்ட பிண்ட சராசரங்களில் நிகழும் நிகழ்ச்சி எல்லாம் அற்புதங்களே. அந்தச் செயல்களுக்கு யாரும் உரியவர் அல்லர். இறைவனது செயல்கள் தான் அவை என்று சொல்லி இறைவன் உண்டென்பதைச் சாதிப்பது எளிது.

இறைவன் இல்லை என்பதைச் சாதிப்பது தான் கஷ்டம். அதையும் நம்மவர்கள் ரஸமாய்ச் சாதிக்கிறார்கள். ஒரு உதாரணம் :—

நம்முடைய படுக்கை அறை மாடியில் இருக்கிறது. கீழ்க்கட்டில் இருந்து, வேலை பார்ப்போம், வாசிப்போம். இரவு பத்து மணி ஆகவும் வாசல் கதவை அடைத்துத் தாழிட்டு விட்டு, விளக்கையும் அணைத்து விட்டுப் படி வழியாக மேலே ஏறிப் படுக்கை அறைக்குள்ப் போய்க் கட்டிலில்ப் படுத்துக் கொள்ளுவோம்.

ஒவ்வொரு நாளுமே இரவு பத்து மணி ஆனதும் இத்தனை காரியத்தையும் செய்கிறோம்.

ஒரு மாசம் ஆகிவிடுகிறது. கட்டிலில் படுத்திருக்கிறோம். படுத்துக் கால் மணி நேரம் ஆகிவிட்டது. ஒரு சந்தேகம் பிறக்கிறது. 'கதவை அடைக்கவில்லையோ' என்ற சந்தேகம். அப்படியே எழுந்திருக்கிறோம் விளக்கைப் போட்டுக் கொள்ளுகிறோம், படி வழியாகக் கீழே இறங்குகிறோம். கீழே வந்து பார்க்கிறோம்.

கதவு அடைப்பட்டிருக்கிறது; தாழையும் போட்டிருக்கிறது.

இதைப் பார்த்த உடன் 'ஓஹோ கதவை அடைத்ததிலும் தாழிட்டதிலும் குறையில்லை, நாமேதான் செய்தோம்' என்று ஞாபகத்திற்கு வருகிறது. பல நாள் மேலே சொன்ன காரியங்களை ஒரே ஒழுங்கு முறையில் செய்து வந்ததால் 'நாம் செய்தோம்'

என்ற உணர்ச்சி மனசை விட்டுக் கழன்று விடுகிறது. இந்த ஒரு நியதி (ஒழுங்கு) காரணமாகவே செயலுக்குரிய "நான்" என்பது இல்லாமல் போகிறது.

**கடவுள் தத்துவமானது,** அநாதியாய், இறுதி இல்லாத காலத்தையே எட்டுவதாய், எங்குமே ஊடுருவி நிற்பதாய் உள்ள ஒரே **நியதி** தத்துவம் தான்.

இந்தப் பரிபூரணமான நியதிக்குள் செயலுக்குரிய அம்சம் ஏதும் புகுதற்கு இடம் இல்லை. இறைவனது செயலுக்கும் இடம் இல்லை. ஆகவே இறைவனும் இல்லை—"**இலதேன் றுரைக்கில் இலதே யாம்.**"

4. **நன்றே நம்பி குடி வாழ்க்கை:** நம்முடைய எஜமானனான இறைவனது ஸ்தானம் இந்த அழகில் இருக்கிறது—இல்லை என்ற நிலையில் இருக்கிறது. "**நமக்கங் கென்னே பிழைப்பம்மா**" இந்த இறைவனது கருவியாய் உள்ள நமக்குச் செயல் என்பது ஏது? செயல் என்பது இல்லையானால் நாம் என்பதும் இல்லை தானே.

செய்யுளில் உள்ள ஓசை அம்சங்களைக் கவனிக்க வேண்டும். "ஒன்றேயென்னில்" என்பதில் வேகமும் அழுத்தமும் இருக்கிறது. "என்றுரைக்கில்" என்பதில் இளக்கமான தொனிதான் இருக்கிறது. ஒன்றென்றும், அன்றென்றும், உண்டென்றும் சொல்லுவது தான் உண்மை. பல என்றோ, ஆம் என்றோ, இலதென்றோ சொல்லுவதில் ஒரு வகையான போலி ரஸம் தான் இருக்கிறது. உண்மை வேகத்தையும், போலி ரஸத்தையும், பிரித்துக் காட்டுவதற்காகவே வேறுபட்ட ஓசைகளைக் கையாண்டிருக்கிறார் கவிஞர்.

முரண்பட ஒன்றென்றும், பலவென்றும் சொல்லுவதிலேயே ஒரு ஹாஸ்யம். அப்படியே அன்று, ஆம்; உண்டு, இலது, என்பதிலும். இலதென்று முடிப்பதில் அதிக ஹாஸ்யம். ஹாஸ்யத்தின் உச்சம் கடைசி அடியில் அழகாய் உரு எடுக்கிறது.

அரிய பெரிய சமய தத்துவங்களோடு கம்பர் எப்படி விளையாடுகிறார் என்பதைச் செய்யுளின் பாவ உருவத்தில் தெளிவாய்ப் பார்க்கலாம்.










# வட்ட மேஜை

## ★ ரேடியோ நிலையத்தாருக்கு

12உ. 'கல்கி' இதழில் பிரசுரித்திருக்கும் ரேடியோ நிகழ்ச்சிகளைப் பற்றிய தங்கள் அபிப்பிராயங்களைச் சம்மதிப்போடு எனது சொந்த யோசனைகளையும் எழுதியிருக்கிறேன்.

உடனே நிறுத்தவேண்டிய நிகழ்ச்சிகள்

1. பாகிஸ்தானின் புளுகுப் பிரசாரத்துக்குத் தாளம்போடும் B B C News அஞ்சல் செய்வதை உடனே நிறுத்தவேண்டும்.

2. வெள்ளைக்காரன் வெளியேறியும், நமது காதைத் துளைத்துக் கொண்டிருக்கும் ஐரோப்பிய சங்கீத நிகழ்ச்சிகளை எடுத்துவிடவேண்டும்.

3. விடுமுறை நாட்கள் தவிர மற்றைய நாட்களில் காலை, மத்தியான நிகழ்ச்சிகள் வேண்டாம். (செய்திகள் மட்டும் ஒலிபரப்பினால் போதும்.)

4. பிரசங்கங்களைக் கூடியவரையில் நீக்கிவிடவேண்டும்.

உடனே சேர்க்கவேண்டியவை

1. ஒவ்வொரு நாளும் முடிவில் தேசிய கீதம் பாடவேண்டும். 'வந்தே மாதர'மும் 'வாழிய செந்தமி'ழும் ஒலிபரப்பலாம். முன்னது சென்னைக்கு, பிந்தியது திருச்சிக்கு.

2. செய்தி விமர்சனம் அவசியம். சில செய்திகளைக் கேட்டு முழு விவரம் தெரிந்து கொள்ள முடியவில்லை. சமீபத்தில் தெ. ஆ. பிரதமந்திரி சொன்னது இந்தியர்களுக்குச் சாதகமா, அல்லது பாதகமா என்று அறிவது சுலபமல்ல. செய்திகள் ஒலிபரப்பி முடிந்தவுடன் கடைசியாகச் செய்தி விமர்சனங்களும் ஒலிபரப்பினால் எல்லோருக்கும் விஷயங்கள் தெளிவாக விளங்கும்.

பிரசாரம்

1. சமீபத்திய ஸ்டிரைக், மாணவர் மறியல் முதலிய சம்பவங்களைக் குறித்து சில உயர்தர பத்திரிகைகளின் தலையங்கங்களை ஒலிபரப்புவது நல்லது.

2. ஹிந்தி சம்பாஷணைகளைச் சரளமான தமிழ் மொழிபெயர்ப்புடன் ஒலிபரப்புவது நல்லது. கல்வி ஒலிபரப்பில் சேர்த்துக் கொள்ளலாம். ஹிந்தி பிரசாரத்துக்கும் வழி.

யோசிக்க வேண்டியவை

ரேடியோவில் விளம்பரம் செய்தால் சர்க்காருக்கு வருமானம் வரும். விளம்பரப் பணத்தை வைத்து பத்திரிகைகள் நடப்பது போல், ரேடியோ நிலையத்துக்கும் அதன் செலவில் ஒரு பகுதியை விளம்பரப் பணம் மூலம் பெற முடியும்.

திருவனந்தபுரம்
12—12—48 வி. எஸ். மணி.

• • • • • • • • •

## பள்ளிக்கூடங்களில் மதபோதனை

பள்ளிக்கூடங்களில் மதபோதனை செய்யப்படும் வகுப்புக்களில் அந்தக் குறிப்பிட்ட மதத்தைச் சேராத பிள்ளைகளை அவர்களுடைய பெற்றோர்களின் அல்லது 'கார்டியன்'களின் விருப்பமில்லாமல் அனுமதிக்கக் கூடாது என்று நமது மாகாண சர்க்கார் விதி ஏற்படுத்த விரும்புவது விசித்திரமாக இருக்கிறது. இது நமது தேசத் தந்தை மகாத்மாவின் விருப்பத்திற்கு நேர் விரோதம் என்றே நினைக்கிறேன்.

பல மதங்களில் பல வித ரூபங்களிலும் பெயர்களிலும் அடங்கியிருக்கும் ஆண்டவன் ஒருவரே யாவர். அவரை எந்த ரூபத்திலும் எந்த நாமத்திலும் நாம் போற்றலாம். சமயப் பூசல்கள் ஒழிந்து, எல்லா மதங்களும் ஒன்றே, யாவருக்கும் ஆண்டவன் ஒருவரே, சாதிமதபேதங்கள் கிடையாதென்னும் அரிய உண்மைகளை உலகுக்கு உணர்த்துவதற்காக மகாத்மா அரும்பாடு பட்டிருக்கிறார். தான் ஹிந்துவாகப் பிறந்திருந்தும் கிறிஸ்துவ போதனைகளைப் பயின்றார். இஸ்லாத்தை வழிபட்டார். இவ்விதம் யாவரும் மத வேற்றுமையை ஒழித்து, மன ஒற்றுமையுடன் வாழ வேண்டுமென்று விரும்பினார்.

ஆகையால் பல மதங்களிலும் புதைந்து கிடக்கும் உண்மைகளை எல்லா மாணவர்களுக்கும் எடுத்துக்காட்டி, சகல மதங்களும் ஒரேவிதமான உண்மையையே போதிக்கின்றன; ஆண்டவன் ஒருவரேதான் என்பதைச் சிறுவர்கள் உணரும்படி செய்ய வேண்டும். சாதி சமய வேற்றுமைகளை முளையிலேயே கிள்ளி எறிந்து விடுவதுதான் தாய்நாட்டின் சுபிட்சத்திற்கும், அண்ணல் காந்தி மகானின் ஆத்ம திருப்திக்கும் நாம் செய்யக்கூடிய சிறந்த பணியாகும்.

பல்லாவரம்
4—12—48 தி. ச. கிருஷ்ணமூர்த்தி.

• • • • • • • • •

## மாணவர்கள் நியாயம்

மாணவர்கள் ஏதோ தங்கள் பொறுப்பை உணராமல் அனாவசியமாக 'ஸ்டிரைக்' செய்து வருவதாக டிஸம்பர் 12-ம் தேதி "கல்கி" 'என்ன சேதி?'யிலும் வட்ட மேஜைப் பகுதியில் வெளியான கடிதம் ஒன்றிலும் பிரசுரிக்கப் பட்டிருந்தது. மாகாணம் பூராவும் கல்லூரி மாணவர்கள் அப்படி ஒன்றும் திடீரென்று புத்தி கெட்டுப் போய் என்றுமில்லாதபடி காரணக்காகத் தொடர்ந்து வேலை நிறுத்தம் செய்ய முன்வரவில்லை. அவர்கள் பக்கம் இருக்கும் நியாயத்தையும், மாணவர் அனைவரையும் ஒன்று திரட்டி, எதிர்க்கச் செய்த கல்லூரி 'செலக்ஷன்' முறையையும் விளக்குவதற்காக மாணவன் என்ற முறையில் இக்கடிதத்தை எழுதுகிறேன்.

செலக்ஷனில் நிறுத்தப்பட்ட மாணவர்களுக்கு ஏற்படும் அக்கிரமமான நஷ்டத்தைப் பற்றிச் சிந்தனை செய்தால் நிலைமை விளங்கும்.

முதலாவதாக, அந்த மாணவர்களின் படிப்பிற்காகச் செலவழிக்கப் பட்ட பணமும் ஒரு வருஷமும் வீணாகிறது. நிறுத்தப்பட்ட மாணவர்களைச் செப்டம்பர் மாதப் பரீட்சைக்கு உட்கார அனுமதிக்கிறார்கள்; முதலிலேயே மார்ச் மாதப் பரீட்சைக்கு உட்கார அனுமதிக்

கப்பட்டால் அவர்கள் நன்கு படித்து பாஸ் செய்வார்கள், அல்லது இரண்டு பாகங்களில் (Parts) தேறி, மீதி பாகத்தைச் செப்டம்பர் மாதத்தில் எழுதி அந்த வருஷத்திலேயே படிப்பை முடித்தவர்களாகி விடுவார்கள். மேலே படிப்பவர்கள் மறு வருஷம் தொடர்ந்து படிக்க இயலும். செலக்ஷனில் நிறுத்தப்பட்டு, செப்டம்பர் பரீட்சை எழுதி முழுவதும் பாஸ் செய்து விட்டாலும் மறு வருஷம் வரை பேசாமல் கையைக் கட்டிக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

சென்னை அரசாங்கத்தார் எஸ். எஸ். எல். ஸி. யில் செலக்ஷன் முறையை எடுத்து விட்டனர்; அதைவிடக் கௌரவமான வகுப்புகளான இன்டர்மீடியட், பி. ஏ. வகுப்புகளுக்கு 'செலக்ஷன்' முறை ஏன் வேண்டுமோ தெரியவில்லை.

செலக்ஷன் முறை தொடர்ந்து இருப்பதால் கல்லூரி அதிகாரிகளுக்கும் ஆசிரியர்களுக்கும் ஏற்படும் லாபம் என்ன வென்பதைப் பற்றி யோசிப்போமானால், மாணவர்கள் கூறும் 'வஞ்சம் தீர்க்கும் முறை' என்ற லாபத்தைத் தவிர வேறு ஒரு லாபமும் இருப்பதாகத் தெரியவில்லை. இந்த வஞ்சம் தீர்க்கும் முறையைப் பற்றி யார் யார் எவ்விதம் சொன்னாலும் கௌரவமான கல்லூரி வகுப்பு அறைகளில் சர்வ சாதாரணமாக நடைபெறும் 'சவால்'களை எவரும் மறுக்க முடியாது. ஒரு ஆசிரியருக்கும் மாணவனுக்கும் விரோதம் இருக்கலாம் அல்லது தம்முடைய மாணவன் தம் அதட்டல் உருட்டல்களுக்குப் பணியவில்லையே, அல்லது தாம் சொல்வதற்குத் தம்மோடு சேர்ந்து தாளம் போட வில்லையே என்று ஆசிரியருக்குக் கோபம் இருக்கலாம். ஒரு நாள் ஒன்றுக்கும் உதவாத தவறைக் கண்டு பிடித்து அதைத் தம் நாவன்மையால் பெரிதாக்கி மாணவனுக்குக் கோபத்தை உண்டு பண்ணி, அவனை வகுப்பு அறையில் நிறுத்தி வைத்து "நீ எவ்வளவு மார்க்குகள் வாங்கினாலும் சரி; உன்னைச் செலக்ஷனில் நிறுத்த எனக்கு அதிகாரம் உண்டு: ஜாக்கிரதை!" என்று சவால் விடுவார்.

எவ்வளவுதான் காலேஜ் பிரின்ஸிபால் "நான் செலக்ஷனில் நியாயமாகவே நடப்பேன்; எனக்குத் தெரியாமல் யாரையும் அநாவசியமாக நிறுத்துவது முடியாத காரியம்" என்று கூறினாலும் செலக்ஷன் பரீட்சையில் மார்க்குப் போடுவது என்னவோ ஆசிரியர் கையில் தான் இருக்கிறது!

எல்லா ஆசிரியர்களும் இப்படி மாணவர் மனதைப் புண் படுத்துகிறார்கள் என்று அர்த்தமல்ல. அல்லது அப்படி மிரட்டுகிறவர்கள் உண்மையில் செய்தே தீருவார்கள் என்றும் அர்த்தமில்லை. ஆனால் செலக்ஷன் பரீட்சையை வஞ்சம் தீர்க்கும் மிரட்டலாக உபயோகிப்பது உண்மையில் அருவருப்பாக இருக்கிறது.

"திருச்சி தேசியக் கலாசாலையில் நடந்த மாணவர் வேலை நிறுத்தத்தின்போது. ஊர்வலத்தில் 'பிரின்ஸிபால் ராமய்யர் ஒழிக!' என்று கோஷம் எழுந்ததாக அறிந்து மிக்க துயரம் அடைந்தோம்..." என்று எழுதியிருக்கிறீர்கள். அந்தச் சமயத்தில் "ராமய்யர் ஒழிக" என்ற கோஷத்திற்கு "ராமய்யர் கையாண்ட அடக்கு முறை ஒழிக" "தடியடிப் பிரயோகம் ஒழிக" என்று தான் அர்த்தம்.

பிரின்ஸிபால் ராமய்யருக்கு எதிராக எழுப்பப்பட்ட கோஷங்களைப் பற்றிக் கேள்விப் பட்ட நாங்கள் மாணவர்களின் மீது நடந்த மிருகத்தனமான தடியடிப் பிரயோகத்தைப் பற்றியும் கேள்விப் பட்டிருப்பீர்கள்.

மேலும், மதுரை அமெரிக்கன் கல்லூரி மாணவர்கள் எத்தனை விதமான அடக்கு முறைகளுக்கு ஆளானார்கள் என்பது பத்திரிகைகள் வாயிலாகத் தெரிய வருகிறது. கல்லூரி நிர்வாகஸ்தர்கள், போலீஸ் குண்டாந்தடி, கண்ணீர்ப்புகை, கல்லூரியை விட்டு நீக்குதல், ஹாஸ்டலில் சாப்பாடு மறுத்தல், பெற்றோர்களுக்கும் பயமுறுத்தல்கள், தந்திகள் முதலிய கொடூர அடக்கு முறைகளையே கையாண்டார்கள்.

சுதந்திரம் கிடைத்த பிறகும் ஏன் நமது தலைவர்கள் இந்த உதவாத படிப்பு முறையை மாற்றி அமைக்க முயலவில்லை என்று மாணவர்கள் இப்போது வேலை நிறுத்தம் செய்யவில்லை. பரீட்சைகள் வேண்டாமென்று வேலை நிறுத்தம் செய்யவில்லை. படிக்கமாட்டோம் என்றும் கூறவில்லை. பிரின்ஸிபால்களை யெல்லாம் ஒழித்துக்கட்ட வேண்டுமென்றும் கூக்குரலிடவில்லை. மாணவர்கள் கேட்பது ஒன்றே ஒன்றுதான். 'எங்கள் எல்லோரையும் சர்வகலாசாலைப் பரீட்சை எழுத அனுமதியுங்கள். நாங்கள் பரீட்சை எழுதுகிறோம்' என்பதுதான்.

சென்னை அரசாங்கம் 'நமக்கென்ன?' என்று பேசாமல் இருந்து விடக்கூடாது. மாணவ சமூகத்தின் அறநிலை அலட்சியம் செய்வது அநியாயம். "ஒருவரையும் செலக்ஷன் பரீட்சையில் நிறுத்தி வைக்கப் பிரின்ஸிபாலுக்கு அதிகாரம் கிடையாது" என்று சிண்டிகேட்டை உத்தரவிடச் செய்ய வேண்டும்.

திருச்சிராப்பள்ளி
12—12—48

எஸ். ஆர். ராஜன்.

## கேலிப்பேச்சு வேண்டாம்

டிசம்பர் 12-ந் தேதி 'கல்கி' இதழில் "ரேடியோ மகாதேவி" என்ற தலைப்பின் கீழ் எழுதிய கர்நாடகத்தின் அபிப்பிராயங்கள் அனைத்தும் வரவேற்கக் கூடிய அம்சங்களாகும்.

"கிராம நிகழ்ச்சி"யைப் பற்றித் தங்களது அபிப்பிராயத்தை வெகுவாகப் போற்ற வேண்டியிருக்கிறது. கிராமவாசிகள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்களோ, அதை அப்படியே படம் பிடித்து எழுதியிருக்கிறீர்கள். உண்மையிலேயே "பட்டிக்காட்டான் போல்" பேசுவதை அவர்கள் வெறுக்கிறார்கள். இவ்வாறு பேசுவதால் தமிழை வளர்க்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டு, அதற்குத் தீமையை விளைவிப்பதற்கு ஒப்பாகும். ஆகவே இனியாவது இந்தக் கேலிப் பேச்சுகள் நீக்கப்பெற்று, தூய எளிய தமிழ் நடையில் நிகழ்ச்சிகளை ஏற்படுத்துவார்களா?

"எளிய நடையில் நிகழ்ச்சிகளைத் தயார் செய்ய சிறந்த அறிவாளிகளின் உதவியைத் தேடவேண்டும்" என்று தாங்கள் தெரிவித்திருப்பது முக்காலும் உண்மையே. எளிய நடையில் நல்ல கருத்துக்களை அமைப்பது எளிதல்ல. சிறந்த அறிவு வேண்டும். பரந்த அனுபவம் வேண்டும். ஆழ்ந்த சிந்தனை வேண்டும். ஆழ்ந்த கருத்துள்ள நிகழ்ச்சிகளாக விருப்பின் கிராமவாசிகளுக்கு மட்டுமல்ல, அந்நிகழ்ச்சிகள் ஏனையவர்களுக்கும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இவ்வாறு செய்தால் "[illegible]"யும் குறையும்.

நம் தமிழ்நாட்டு ரேடியோ நிலையத்தார்கள் இவைகளை வரவேற்பார்களா?

முசிரி
12—12—48 கே. பழனியாண்டிப் பிள்ளை.

*** *** ***

## பெயரை மாற்றுங்கள்

தூத்துக்குடியிலுள்ள 'ஆஷ் மெமோரியல் ஹால்' தமிழ்நாட்டின் அவமானச் சின்னம். வ. உ. சி.க்குச் சிறைத் தண்டனை விதித்தும் செக்கிழுக்கச் செய்தவனுமாகிய வெள்ளையன் ஆஷ். அவன் பெயரால் அந்த மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது. அதை வ. உ. சி. ஞாபகார்த்த மண்டபமென மாற்றி அமைக்கும்படி தமிழர்கள் சார்பாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

தியாகராயநகர்
28—11—48 டி. எம். குருசாமி.

*** *** ***

## அழுக்கு நோட்டுகள்

நமது சுதந்திர இந்தியாவின் நற்சமயம் செலவாணியிலிருக்கும் ரூபாய்த் தாள்கள், அழுக்காய் இருந்தாலும், கசங்கியிருந்தாலும் சற்றுக் கிழிந்து இருந்தாலும் அல்லது இரண்டாய்க் கிழிந்து ஒட்டியிருந்தாலும் தபால்களிலும், விசேஷமாகக் கிராமங்களிலும் வாங்க மறுக்கிறார்கள். இதனால் பொது ஜனங்கள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள்.

கிராம முனிசிப், தபால் ஆபீஸ், தாலுகா ஆபீஸ் முதலிய சர்க்கார் காரியாலயங்களில் வரி, கிஸ்தி, ஸ்டாம்பு முதலியவைகளுக்குச் செலுத்தும்போதும் அத்தகைய ரூபாய்த் தாள்களை வாங்க மறுக்கிறார்கள். இதனால் மனமுடைந்த ஜனங்கள் 'என்ன ஐயா, சர்க்கார் அச்சிட்ட ரூபாய்த் தாள்களை தாங்களே எடுக்க மறுத்தால், பொது ஜனங்களாகிய நாங்கள் வேறு என்ன செய்வது?' என்று கேட்டால், 'தாலுகா கஜானாவுக்குப் போங்கள்' என்று சொல்லுகிறார்கள். மேற்படி கஜானாவுக்குப் போனால், 'இம்பீரியல் பாங்கிக்குப் போங்கள்' என்று சொல்லுகிறார்கள். இம்பீரியல் பாங்கியில் கேட்டால், 'இது ஒட்டுப்போட்டது, ரிசர்வ் பாங்கிக்குப் போங்கள்' என்று சொல்லுகிறார்கள். சென்னைக்குச் சென்றால் டில்லிக்குப் போகச் சொல்லுவார்கள் போல் தோன்றுகிறது!

ஆகவே, சர்க்கார் இவ்விஷயத்தில் சிறிது கவனம் செலுத்தி, ஆங்காங்குள்ள தபால் ஆபீஸ்களிலும், தாலுகா ஆபீஸ்களிலும் அம்மாதிரியான ரூபாய்த் தாள்களை எடுப்பதற்கான ஏற்பாடு செய்வார்களானால், பொது ஜனங்களுக்கும் விசேஷமாய் ஏழைக் கிராமவாசிகளுக்கும் பெரிய உதவியாயிருக்கும்.

வடக்கன்குளம்
3—12—48 ஆ. ஞா. அருள்மிக்கேல்.



## அபிப்பிராய பேதம்!

வந்தவர் :— என்ன ஸார், உங்கள் பெண் ரேடியோவிலே பலே ஜோராய்ப் பாடுகிறாள் போலிருக்கிறது! ரொம்ப சுவாரஸ்யமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களே?

வீட்டுக்காரர் :— என்னுடைய பெண் இல்லே, ஸார்! வேறு யாரோ பாடுகிறார்கள்!

வந்தவர் :—அப்படிச் சொல்லுங்கோ! அதுதான் கேட்கச் சகிக்கவில்லை; ரேடியோவை நிறுத்திவிடுங்கள், ஸார்!

★ இந்த இதழில் வெளியாகியிருக்கும் வட்டமேஜைக் கடிதங்களில் திருவனந்தபுரம் வி. எஸ். மணி எழுதியிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25 பரிசு வழங்கப்பட்டது.




யாவரும் விருப்புடன் தேர்ந்தெடுத்து வாங்கும் சிறந்த சமையல் சாதனம். பதார்த்தங்களின் சுவையையும், மணத்தையும் பன்மடங்கு பரிமளிக்கச் செய்கிறது. சுத்தமான தாவர எண்ணெயில் சாஸ்திரிய முறையில் தயாரிக்கப்பட்டு வீட்டுத் தேவைக்காக காற்றுப் புகாத லீவர் மூடியுடன், 2, 5 பவுண்ட் டின்களில் எல்லா முக்கிய வியாபாரிகளிடமிருந்து கிடைக்கும்.

# காமதேனு

## வனஸ்பதி

தயாரிப்பவர்:

**மேட்டூர் கெமிகல் அன் இன்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.,**

மேட்டூர் அணை - சேலம்

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:

**சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட்**

திருச்சிராப்பள்ளி

பூரண விற்பனை ஏஜெண்டுகள்,

**அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிமிடெட்**

120, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்

காமதேனுபற்றிய இதர விசேஷ விவரங்களறிய அகில இந்திய காதி ஸ்வதேசி பொருட்காட்சியிலுள்ள எங்கள் ஸ்டாலுக்கு விஜயம் செய்யுங்கள்.


இருமலுக்கும்
ஜலதோஷ-
த்திற்கும்
ஸிரோலின்
ரோச்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392

